திராவிடநாடு

4—5—58 | வார வெளியீடு | விலை 16காசு

# அரசியலார் செயல்!

[ எழிலியரசன் ]

பைந்தமிழைப் பயில முயலாரடா—அவர்
பாவலரைப் பழித்தே திரிவாரடா
செந்தமிழ்ப் புலவரை மதியாரடா—அவர்தம்
செம்மைப் புகழினை அறியாரடா
தன்னல மாயவர் வாழ்வாரடா—அவர்
தன் னலத்திற்காக உழைப்பாரடா
பன்னலம் பெற்றவர் வாழ்வாரடா—அவர்
பாமர மக்களை வதைப்பாரடா
இவரைத்தான் நாட்டார் மதிப்பாரடா—நாட்டின்
இன்னலைச் சொன்னால் கறுப்பாரடா
எவரையும் எதுவும் செய்வாரடா—தன்
இட்டமா யாட்சி புரிவாரடா
வரிகளை அதிகம் சுமத்துவாரடா—என்றும்
வறுமையைப் போக்க வழிசெய்யாரடா
அரசியனு பவ மடையாதார்—இவர்
ஆன்றோ ரரசியலைப் பழிப்பாரடா
சாதிகள் நாட்டி லதிகமடா—கெட்ட
சாத்திரத்தால் நாடு குலையுதடா
நீதிகள் வாழ இடமில்லையே—இந்த
நீதங்கள் எங்கு நடக்குமடா
தமிழ்நாடென பண்டும்பெயரிருக்க—இதைத்
தட்டிக் கழித்து மறுப்பாரடா
அமிழ்த மாமுயிரை மறந்தே—நீவிர்
அறிவதன் துணை தலைமையில் கூடுவீரே
தமிழன் புகழை நாட்டிடுவோம்—இந்தத்
தரணி புகழ வாழ்ந்திடுவோம்
அமிழ்தமாம் தமிழ் மொழியை—நாம்
அன்னை யெனப்போற்றி உயர்ந்திடுவோம்.

# பெங்களூர் கண்டோம்! ஆரூர், அழைக்கிறது!!

பெங்களூர் முடிந்துவிட்டது! ஆரூர், அழைக்கிறது!!

கருநாடக மாவட்ட மாநாடு, கடந்த கிழமை, களிப்பு விழாவாகவும் கருத்துத் தோட்டமாகவும் காணக் கிடைத்தது! சுவையைப் பெற, சுதந்திரத்தைக் கண்டு மகிழ வாரீர், வாரீர் என்று இந்த கிழமை 'தஞ்சை' அழைப்பு விடுக்கிறது!!

தமிழகத்தின் பகுதிகளில் மாநாடுகள் நடத்துகிறார்கள்—இதுதானே? திராவிடநாடு கேட்கும் தி. மு. க.,வுக்கு, வேறிடத்தில் இடமுண்டா, என்று கேள்வி எழுப்புவோர் உண்டு. அவர்கள், வந்து கண்டிருக்க வேண்டும், பெங்களூரில் நடைபெற்ற தி.மு.க. மாநாட்டினை! மக்கள் வெள்ளம்—சிறந்த ஏற்பாடுகள் — அது மட்டுமின்றி, ஏராளமான கன்னடியர் கலந்துகொண்டனர்—கன்னட மொழியிலேயே விளக்கம் தரும் பேச்சாளர்களையும் கழகம்கண்டது அங்கே!!

ஓடி ஓடிப்பணியாற்றிய வரவேற்புக் கழகத் தலைவர் எஸ். வி. பதியும், செயலாளர்களான வி. கே. நடேசன், தி. திராவிடமணி ஆகியோரும், விளம்பரக்குழு உறுப்பினர்களாக எஸ். ஜி. வேந்தன், இரா. கோபாலும், தொண்டர்படைத் தலைவர்களாக பெரியசாமியும், தே. செல்வமும் இருந்து செயலாற்றினர், கருநாடக மாநாட்டுக்கு. இவர்களைப் பற்றி எழுதவும் வேண்டுமோ! தி. மு. க.,வைக் கன்னடமெல்லாம் பரப்பிட வேண்டும் என்கிற இவர் தம் ஆவல், பலித்திடும் காட்சியினைக் கண்டோம்—நாம். மாநாட்டுக்குத் தலைமை தாங்கிய கழகத்தின் முத்து, சென்னை தந்த செல்வம், சுயமரியாதைச் சின்னம் தோழியர் சத்தியவாணிமுத்து M.L.A. யும், மாநாட்டினைத் துவக்கி வைத்த, நடிப்புலகத்திலிருந்து நமக்குக் கிடைத்த முதல் தொண்டர்—கொள்கைக் குன்று — நல்ல நண்பர் டி. வி. நாராயணசாமியும், வழங்கிய நல்லுரைகளுக்கும் நாவலர் தம் உரைக்கும், நமது கழக காவலர்களின் சொற்பொழிவுக்கும், வந்திருந்தோர் காட்டிய ஆர்வமும் எழுச்சியும், எத்தனை 'தேபர்'கள் இங்கு இறக்குமதி செய்யப்படினும் என்ன—வெல்லுவோம் நாம், என்கிற உற்சாகத்தை வழங்கிற்று! மலரின் மணம் பரவுகிறது என்றால், மணத்தை நுகர்வோர் படிப்படியாக மலரிருக்கும் தோட்டம் நாடிவரத்தானே செய்வர் — மணம் பரவுகிறது, கருநாடகத்தில். அதற்கெனத் தம்மை ஒப்படைத்த மாபெரும் படையும் பெருகிவருகிறது—இனியென்ன!!

காவிரி தோன்றும், கருநாடகத்தில் கடந்த கிழமை கழகத்தின் வளர்ச்சி கண்டோம்—இதோ, காவிரி கொஞ்சித் தஞ்சமடையும் எமதிடத்தில் வந்து பாரீர் கழகத்தை என்று தஞ்சை மாவட்டத்தினர் அழைக்கின்றனர்! நன்செய் மாவட்டமல்லவா? அந்த எக்களிப்பும் பெருமிதமும் அவர் தம் குரலில் தோன்றுகிறது!! என். எஸ். இளங்கோவும், மன்னை, நாராயணசாமியும் குடவாயில் கிருட்டிணமூர்த்தியும், ஆரூர் நாகப்பனும், அடைக்கலமும், நடராசனும் ... போதாக்குறைக்கு மு. கருணாநிதியும், உள்ள வரவேற்புக் குழுவும் அவர்களுக்கு உறுதுணையாகத் தஞ்சை மாவட்டத் தோழர்களும் உள்ளனரென்றால், கேட்கவா வேண்டும்! அழைக்கின்றனர், தாயகத்தை! மதியழகன் தலைமைவகிக்கிறார் ப. உ. சண்முகம், எம். எல். ஏ. துவக்கி வைக்கிறார்.

'மதி'யையும் 'முகத்தையும்' நாவலர் தம் உரையையும், கழகத் தோழர்கள் விளக்கத்தையும்காணவும் கேட்கவும் வருகின்ற மே 10, 11-தேதிகளில் திருவாரூர், வாரீர்! அனைவரும் வாரீர் என்று நாமும் அழைக்கிறோம்!!



## அன்றும் இன்றும்

"உலகம் முன்னேறிக் கொண்டாயிருக்கிறது?

ஒரு வேடிக்கையைக் கேளுங்கள். 1928-ல் ஒருநாள் காலையில், எனக்கு நோபல் பரிசு வந்திருப்பதாகத் தந்தி வந்தது. அன்று மாலையே நானும் என் மனைவியும், வெளிநாடு செல்வதற்காக ரயில் ஏறினோம்.

உலகம் முன்னேறிவருவதாகக் கூறப்படும் இப்போது என்ன தெரியுமா? லெனின் நினைவுப் பரிசு எனக்கு வழங்கப்பட்டிருப்பதாக ஒரு தந்தி வந்தது! அது கிடைத்து, மாஸ்கோவுக்குப் புறப்பட, நான்கு மாதங்கள் ஆயிற்று. எளிதில் அனுமதிக்கவில்லை; ஏதேதோ, விளக்கங்கள் கேட்டு, அவைகளைப் பூர்த்தி செய்ய வேண்டியதாயிற்று.

இதற்குப் பெயரா உலக முன்னேற்றம்?"

என்று மைசூர் முதலமைச்சர் நிசலிங்கப்பா தலைமையில் நடைபெற்ற ஒரு விருந்தில் உலகப் புகழ்பெற்ற விஞ்ஞானி டாக்டர் சர். சி. வி. இராமன் சொன்னாராம், கடந்த 28-ந்தேதி. வெள்ளையன் ஆண்ட காலத்தில், வெளிநாடு செல்ல உடனே அனுமதி கொடுத்தார்கள்! இப்போதோ, எதெற்கெடுத்தாலும் நேரம் விரயமாகிறது!!

★



# தியாக நாள்

மலர் 16] ஆண்டு சந்தா ரூ. 8 [4-5-58] தனிப் பிரதி 16-காசு [இதழ் 42

மேதினியெங்கும் மே நாள், வழக்கம்போல் கொண்டாடப்படும்! பாட்டாளிகள் உள்ள இடங்களிலும், அவர் தம் உள்ளங்களிலும் இந்நாள், மன எழுச்சியையும், விழாக் காட்சியையும் உருவாக்கும்!!

"15-மணிநேரம் உழைத்துழைத்துச் சாகவேண்டுமா? நாங்களும் மனிதர்கள்தானே! 12-மணி உழைக்கிறோமய்யா-8-மணி நேரம் பாடுபட்டால் போதாதா", என்று 1886-மே முதல் நாள், பாட்டாளியின் முதல் குரல் கிளம்பிற்று! அடிமை, குரல் எழுப்புவதா — குமுறலைத் தெரிவிக்கும் துணிச்சல் பெறுவதா—என்று ஆண்டைகளின் உள்ளத்திலே எழுந்தடித்த ஆத்திரத்தின் காரணமாக, துப்பாக்கி திறந்தது! சுடுவதும், சிறைச்சாலையும், சாதாரண வழக்கமாயின!! சுடு—போட்டு, அடை—பொசுக்கு—அடி—ஆனாலும், அஞ்சமாட்டோம் — ஏனெனில் நாங்கள் கேட்பது நியாயமானதாகும்—நியாயத்தை, நெருப்பாலும், பிணத்தாலும் மூடிவிட முடியாது, என்று சொல்லும் மன உறுதியை, ஒவ்வோராண்டு மேதினமும் தொழிலாளர்களுக்கு வழங்கி வருகிறது. எனவேதான், புத்துணர்ச்சி பெறும் நாளாக, விடுதலை எழுச்சிக்குச் சாணை பிடித்துக்கொள்வதுபோல, ஒவ்வோராண்டு மே நாளையும், உலகமுழுவதிலுமுள்ள பாட்டாளிகள் கூடாரம் பெருமிதத்தோடு, கொண்டாடுகிறது! பாட்டாளிகளும், பதைக்கும் வாழ்வை நுகர்வோரும், உரிமைப் பாதையில் நிற்போரும் நிரம்பிய தி. மு. கழகமும் இந்நாளை, ஒரு உன்னத நாளாகக் கருதுகிறது—கொண்டாடுகிறது!!

கடந்த மே தினத்துக்கும் இந்த மேதினத்துக்கும் இடையிலே, எந்தச் சக்தி வெற்றிபெற்று வருகிறது என்பதை நோக்கிடின், மனம் பூரிக்கவே செய்யும். அடித்தால் அடங்கிவிடும்—பூட்டினால், கருகிவிடும்—மிரட்டினால் சாய்ந்துவிடும்—என்று, ஆதிக்கக்காரர்கள், விடுதலை விரும்பிகளைத் துச்சமாக மதிப்பது சகஜம்! இந்தக் கட்டம் மாறி, வளரும் உழைப்பாளிகளின் படையினைக்கண்டு, அச்சம் கொள்வோராக மாறி வருகின்றனர் ஆதிக்கபுரியினர்!! அந்த அச்சத்தின் காரணமாக, என்ன இனிப்புத்தரலாம், எரிமலையை மூட எந்த மூடியைப் போடலாம், எப்படி முயன்றால் பாட்டாளிகளின் மனதை அடங்கவைக்கலாம் என்கிற சாகசப்பாதையினையும் மேற்கொள்ள ஆரம்பித்து வருகின்றனர். பிர்லாவும் டாடாவும் பேசுகின்றனர், இனிமையாக! நாட்டுக்கு நன்மை என்கிற பொது நலத்தைக்காட்டி, அதற்காகவே தாங்கள் பாடுபடுவதாகச் சொல்கிறார்கள் — நாடாளும் காங்கிரசும் அதுவே தனது வழி எனச் சொல்லி, கொப்பளங்கள் வெடிக்காமல் என்னென்ன மருந்துகளைத் தடவலாம் என்று யோசிக்கிறது.

கவனிக்கக் கூடாதது! அலட்சியப்படுத்தப்படவேண்டியது!!—என்று கருதிய காலம்போய் இவைகளை எப்படிச் சமாளிப்பது, என்னென்ன சாகசங்களைக் கையாண்டு வெடிக்கும் கொப்புளங்களை அடங்கச்செய்வது, என்கிறமுயற்சிக்கு ஆள்வோரும் அவர்களை ஆட்டிப்படைக்கும் ஆதிக்கக்காரர்களும் வரத் தலைப்பட்டிருக்கிறார்கள். சென்ற சில ஆண்டுகளாக ஏற்பட்டிருக்கும் இந்த மன மாறுதல், கடந்த ஆண்டிலும் அதிகரித்தே உள்ளது! குறையவில்லை!!

உரிமையா? உனக்கா! — என்று அதட்டிக் கேட்ட காலம் போய், உரிமைதானே! உனக்குத்தானே!! என்று சஞ்சலத்துடன் கூறும் கட்டத்தை இப்போது, பல இடங்களில் காண்கிறோம். ஆள்வோரும், ஆதிக்கக்காரர்களும், முரட்டுத்தனத்தை விட்டு, புது வழி மூலம், விடுதலைக் குரலை மடக்கிடும் அவசியத்துக்கு வந்துள்ளனர். அதாவது, புரையோடும் புண்ணுக்குப் புனுகு பூசும், முறைகாண முயற்சிக்கின்றனர்.

காங்கிரஸ் பேசிடும் சோஷியலிசமும், கனதனவான்கள் கூறிடும் 'ஒத்துப்போதல்' முறையும் இது தான். இந்த வழி, புண்ணை ஆற்றாது என்பதையும், சமூக அமைப்பைத் தலைகீழாக மாற்றியமைத்தால்தான் "சக்திக்கேற்ற உழைப்பும்; உழைப்புக்கேற்ற ஊதியமும்" என்கிற தாரக மந்திரம் வெற்றிபெறும் என்பதனையும் பாட்டாளிகள், ஒன்றாக உணர்ந்திருக்கிறார்கள். அந்த உணர்வு, கடந்த ஓராண்டில், உலகெங்கும் அதிகமாகி வருகிறதே ஒழிய — குறையவில்லை.

நாட்டை நாடு அடிமைப்படுத்துவதையும் — மனிதனை மனிதன் வஞ்சித்து வாழ நினைப்பதையும் —தீமையானது, வேண்டாதது, ஒழித்துக் கட்ட வேண்டியது என்கிற 'உண்மை' ஒவ்வோர் இதயத்தினுள்ளும் பற்றிக்கொண்டு வருவது, உலக முன்னேற்றத்தின் காட்சிகளில்ஒன்றாகும். தீ பற்றுகிறது! —என்பதைக் கூறும் ஆதிக்கபுரியினர், பழைய திமிர்ப்பாதையை விட்டு, பாசமும், நேசமும் காட்டி 'சரண்டிடும்' பாதையை நாடிடும் நிலைமைக்கு வந்துகொண்டிருப்பதும், தொழிலாளர் உலகுக்கு ஒரு வெற்றியேயாகும். எனினும் நிரந்தர வெற்றி காண—புதுயுகம் பூத்திட—செய்யவேண்டிய வேலைகள், ஏராளம் இருக்கிறது! அவைகளைச் செவ்வனே

செய்து, தாழ்ந்த தாயகத்தின் விலங்குகளை உடைத்து, தன் உடல்களிலே பூட்டப்பட்டிருக்கும் ஆதிக்கச் சங்கிலிகளையும் தூள் தூளாக்கி, பாடுபடும் நாம், 'முழுப்பலன்' பெறும் உன்னதபுரி நோக்கி விரையவேண்டிய சபதத்தை, ஒவ்வொரு பாட்டாளியும் இந் நாளில் மனதில் ஏற்றுக்கொள்ளவேண்டும்.

திராவிடநாடு, எனும் அந்த உன்னத புரியில், சமதர்மம் மணக்கும்! மனிதனை எல்லாரும் வாழலாம்! சாதி சமயக் கழுகுகள் இருக்காது! சாந்தமும் அமைதியும் நிலவும்! பிறகு, உலகப் பாட்டாளிகளுடன் ஒன்றுகூடி மகிழலாம்!—அந் நாள் வர, இந்தத் தியாக நாளினை, ஒவ்வொரு தோழரும் பயன் படுத்தவும், பலருக்குச் சொல்லவும் வேண்டுமென விரும்புகிறோம். வெல்க உழைப்பு! வெல்க உரிமைக் குரல்!!

★

# ஓய்வு கேட்கிறார்!

நாற்பது ஆண்டுகளுக்கு மேல் அல்லும் பகலும் அரசியலிலேயே கிடக்கிறேன்! பதினேழு ஆண்டுகளாக அரசுப் பாரத்தைத் தாங்கிக்கிடக்கிறேன்!!—என்று, அறிவிக்கிறார், நேரு அவர்கள்.

தென்னாடு வந்து, கேரளம் கண்டு, டில்லி சென்றதும், அவர் செய்திருக்கிற முதல் காரியம், பார்லிமெண்டு காங்கிரஸ் உறுப்பினர்களைக் கூட்டி, இந்தச் சேதியை அறிவித்துள்ளதுதான்.

எதானாலும் நீண்ட நேரம் பேசுகிற அவர், இதனை, ஒரு அறிக்கையாக எழுதிப் படித்தாராம்—அதிகம் பேசவில்லையாம் — இதற்காக அவசரமாகக் கூட்டப்பட்டதாம், இந்தக் கூட்டம்!!

இந்திய உபகண்டத்தின் வரலாற்றில் நேரு அவர்கள் ஆற்றியிருக்கிற பணியின் அளவை, யாரும் அலட்சியம் செய்துவிட முடியாது. அரசியலில் அவர் காட்டிடும் ஆர்வத்தையும் வேகத்தையும், எவரும் சாதாரணமாகக் கருதிட முடியாது. அல்லும் பகலும் அவர் பட்டிடும் பாட்டினையும், மற்றோர் என்பதால், நாம் மறுக்கவில்லை.

அவர் அவசர அவசரமாகப் பார்லிமெண்டுக் கட்சியைக் கூட்டி இந்த விளக்கம் தர வந்தது வேறு எதற்குமல்ல—ஓய்வு வேண்டுமாம், அவருக்கு! உருக்கமாக, வெளியிடுகிறார்!!

இத்தனை ஆண்டுகள் இடைவிடாத உழைப்பிலிருக்கும் அவர், ஓய்வுபெற வேண்டியது, அவசியம். எவ்வளவுதான், "என்னைக் கிழவன், கிழவன் என்று சொல்லாதீர்கள். எனக்கு இளமை முறுக்கும் செயலாற்றும் வலிவும் உண்டு", என்று சொல்லிக் கொண்டாலும், தள்ளாத வயது, தனது விசித்திரங்களைப் பதிக்காமற் போகாது. நீண்ட காலமாக இருந்து வரும் அவர், ஓய்வுபெற வேண்டியது அவசியம்தான்.

நேரு அவர்களே! அன்றுட அரசியலிலிருந்து விலகி, மகாத்மாவைப் போலாகி, ஒரு பொது மனிதராக நீங்கள் விளங்க வேண்டும். நீங்கள் நாட்டின் சொத்து; ஒரு கட்சியின் சொத்தல்ல. நீங்கள் வகிக்கும் பிரதமர் பதவியை, நீங்களே ஒரு ஆளைத் தேர்ந்தெடுத்து வைத்து விட்டுப் போகவேண்டும்! — என்று ஜெயப்பிரகாஷ்நாராயண், அடிக்கடி வேண்டுகோள் விடுத்தபடியிருக்கிறார்.

ஜெயப்பிரகாசும், நேருவும் நெருங்கிய நண்பர்களாம்! நண்பரின் வாழ்வில் அக்கரையும், நாட்டின் எதிர்காலத்தில் ஆர்வமும் இருப்பதாக ஜெயப்பிரகாசரின் வேண்டுகோள்கள் காட்டுகின்றன. நேருவுக்கு அடுத்தபடி அந்த இடத்தில் ஜெயப்பிரகாசரே இருக்கலாமே என்று ஏடுகளில் கருத்துக்கள் வருகின்றன. அந்தளவுக்கு, நேருவிடம் நெருக்கம் கொண்டவர். நேருவிடமே போய், இந்தச் சேதியை நேரில் கூறலாம் ஜெயப்பிரகாசர்! ஆனால், வேண்டுகோள்களை அடிக்கடிப் பத்திரிகைகள் மூலம்தான் அனுப்புகிறார்!! அதன்மூலம், ஒரு பரபரப்பும், நேருவின் கவனத்தைக் கவரும் ஆசையும் தென்படுகிறதே ஒழிய—எளிமையான முறையில் செய்யப்படவில்லை இது.

ஒரு அதிகாரி வேலையைவிட்டுப் போக வேண்டுமென்றால், 'கால் கடுதாசி' எழுதிக் கொடுத்தால், தீர்ந்தது. ஆனால் அரசியல் வாதிகளால், அது முடியாது. அதிலும் நேரு போன்றவர்களால், திடீரென அரசியலை விட்டு ஒதுங்கிவிடுவதென்பது ஒருபோதும் முடியாது!!

ஆனால் ஒதுங்குவது என்பது வேறு; ஓய்வுபெறுவது என்பது வேறு.

நேரு அவர்கள், ஒருபோதும் அரசியலை விட்டுத் தனது வாழ்வைப் பிரிக்கமுடியாதென்பதை கேரளத்தில் பேசிய ஒரு கூட்டத்தில் தெளிவுபடுத்தியிருக்கிறார்! ஒதுங்கிக்கொள்ளும் உத்தேசமே தனக்குக் கிடையாது என்கிறார்!! எனவே, அவர் கேட்பது ஓய்வு தான்—ஒதுங்குவது, அல்ல.

"கொஞ்ச நாளைக்கு, நான் இப்போது கவனித்து வரும் தினசரி

(13-ம் பக்கம் பார்க்க)

பெண்கள் சுதந்திரமாய் வாழ வேண்டியதுதான். ஆனால் இந்த சுதந்திரம் குடும்பத்தின் கௌரவத்திற்கும், நலனுக்கும், உயர்வுக்கும் கணவனுடைய மன அமைதிக்கும், தன் நல்ல பெயருக்கும் உகந்ததாகவே இருக்க வேண்டும். பொறுப்புணர்ந்து நடக்கும் பெண்களே குடும்பத்தின் சக்தி விளக்குகள்.

# ஜனநாயகப் போர்வையில்!!

★

M. S. வெங்கடாசலம், M. A.

கோலாகலமான விழாவாம் — ஆரம்பப் பள்ளியில்! — 'அண்ணமலை'யான் திருப்பதியில்!

அமைச்சர் பக்தவத்சலத்துக்குப்பொன்னாடை போர்த்தப்பட்டதாம்!

பொன்னாடை போர்த்தியோர் மனம் மகிழ்ந்திட, சில பொன்னான வாசகங்களை உதிர்த்திருக்கிறார், நமது போலீசு அமைச்சர்!

"நல்ல முறையில் பணியாற்றக்கூடிய எதிர்க்கட்சி இன்று நாட்டில் எதுவுமில்லை" என்று புலம்பியிருக்கிறார்.

ஜனநாயகம் நல்லமுறையில் இயங்கிட எதிர்க்கட்சி தேவை — எவரும் மறுத்திட முடியாத உண்மை!

நல்ல எதிர்க்கட்சி எதுவுமில்லையென்றால், ஜனநாயகத்தில் நம்பிக்கையும், அதன் வளர்ச்சியில் அக்கறையும் கொண்டவர் வருந்திடுவர் — இல்லை என்று எவரும் மறுத்திடவில்லை!

ஆனால், எதிர்க்கட்சி இல்லையே என்று புலம்புகிற அமைச்சரும், அவர் சார்ந்திருக்கிற காங்கிரசுக் கட்சியும், எதிர்க்கட்சி வளருவதற்காக அளித்திருக்கிற வாய்ப்பு என்ன என்று எண்ணிடும்போது தான், இவரது வேஷம் கலைகிறது —இவர் சார்ந்திருக்கிற கட்சி ஜனநாயக வளர்ச்சியில் எவ்வளவு 'அக்கறை' காட்டுகிறது என்பதும் தெள்ளத் தெளிய விளங்குகிறது!

'அளித்திருக்கிற வாய்ப்பு' என்று குறிப்பிடுவது, ஆட்சியிலிருக்கிற கட்சியே எதிர்க்கட்சியை அல்லது கட்சிகளை வளர்க்க வேண்டும் என்பதல்ல! அவ்வாறு வளர்க்கப்படும் கட்சியும் எதிர்க்கட்சியாக இயங்கிட முடியாது—நாமறிவோம்!

அவர்கள் எதிர்க்கட்சியை வளர்க்க வேண்டாம்—வளரவிடட்டும்!

உண்மையில் ஜனநாயக வளர்ச்சியில் அக்கறை கொண்டவர்களாகக் காங்கிரசு ஆட்சியாளர்கள் இருப்பார்களானால், அவர்கள் செய்ய வேண்டிய பணி இது தான்!

ஆனால் இந்தப் பணியை — அடிப்படை ஜனநாயகக் கடமையினை — அவர்கள் எந்த அளவு ஆற்றி வந்திருக்கிறார்கள்?

கடந்த பத்து ஆண்டு வரலாறு காட்டுகிற உண்மை, காங்கிரசார் எந்த எதிர்க்கட்சியின் வளர்ச்சியையும், சகிப்பதில்லை என்பது தான்!

எதிர்க்கட்சி வேறு — எதிரி வேறு! எதிர்க்கட்சியினர் எதிரிகளல்லர் — இது ஜனநாயகத்தின் அடிப்படை உண்மை.

இந்த உண்மையினைப் புரிந்து கொள்ளாமலோ, அல்லது புரிந்துகொள்ள மனமில்லாமலோ, காங்கிரசார் எதிர்க்கட்சிகளுக்கு எவ்வளவு இன்னல்களைத் தர முடியுமோ அவ்வளவையும் தந்து வந்திருக்கின்றனர்—தருகின்றனர்.

தடுப்புக்காவல் சட்டம், தவருமல் புதுபிக்கப்பட்டு, எதிர்க்கட்சிகளின் வளர்ச்சியை விழுங்கிட, அகல வாய்த்திறந்து, காத்துக் கிடக்கிறது. அதற்கு இரையாகி, சிறைக்கோட்டம் நண்ணியிருக்கிற எதிர்க்கட்சித் தலைவர்களும் தொண்டர்களும் ஏராளம்!

தடியடி தர்பார் — கண்ணீர்ப் புகைக் குண்டுகள் — துப்பாக்கிப் பிரயோகம்— இவையனைத்திற்கும் ஆட்பட்டிருக்கின்றன இன்றிருக்கிற எதிர்க்கட்சிகளிலே, பெரும்பாலானவை!

இவையெல்லாவற்றையும் தாங்கிக் கொண்டு, ஒரு கட்சி வளர்ந்தால், அந்தக் கட்சியை இழித்தும் பழித்தும் பேசுவது—இல்லாதன பல சொல்லி ஏசுவது — எந்தக் குற்றச்சாட்டின் மூலம் அந்தக் கட்சியினைச் சட்ட விரோத இயக்கமாக ஆக்கிட முடியும் என்று சட்டத்தில் சந்து பொந்துகளைப் பார்த்துக்கொண்டிருப்பது—என்பன அனைத்தையும், ஒன்றுவிடாமல் கையாளுகிறது, இன்றைக்கு ஆட்சியிலே இருக்கிற காங்கிரசு!

எதிர்க் கட்சிகளைப் பற்பல இன்னல்கட்கும் உட்படுத்தி, அவற்றின் வளர்ச்சியைக் குன்றவைத்திட முயலுவதோடல்லாமல், எந்த நியாயத்திற்கும் கட்டுப்படாத பற்பல முயற்சிகளாலே தம் கட்சியை வளர்த்திட முனைகின்றனர் — ஆட்சியிலே இருக்கின்ற காங்கிரசார்!

மக்கள் விழிப்போடில்லாத காரணத்தால், அவர்கள் வாயைக் கட்டி வயிற்றைக் கட்டி வரியாகக் கொட்டித்தருகிற பணம், ஆட்சியிலே இருக்கிற காங்கிரசின் வளர்ச்சிக்குப் பற்பல வழிகளிலும் பயன்படுத்தப்படுகிறது!

தேசிய வளர்ச்சித் திட்டம், சமுதாய வளர்ச்சித் திட்டம், இவற்றின் மூலம் செலவிடப்படும் பணத்தின் பெரும்பகுதி, காங்கிரசு அபேட்சகர்கள் தேர்தலிலே வென்றிருக்கிற தொகுதிகளிலே செலவிடப்படுகிறது!

இந்த இழிநிலையை — ஜனநாயகத்துக்கு உலை வைக்கும் ஒழுங்கற்ற தன்மையினை—காங்கிரசார் வெற்றிபெற்ற பகுதிகளிலே தான், பற்பல நன்மைகளும் செய்யப்படும் என்ற எண்ணத்தை மக்கள்பால் உண்டாக்கி, அதன் மூலமாகவாவது மக்களது ஆதரவைப் பெறவேண்டும் என்ற அற்ப ஆசையை — தி. மு. க. சட்டமன்ற உறுப்பினர்கள் அனைவரும் கண்டித்துப் பேசியிருக்கிறார்கள்!

அத்தகைய இழிநிலை, — ஜனநாயகத்தின் கழுத்திலே பாய்ச்சப்பட்டிருக்கும் கூர்வாளைப்போன்ற கொடுமை — நமது தமிழகத்துக் காங்கிரசாலே மட்டும்தான் செய்யப்படுகிறது என்பதல்ல!

அண்மையில் மத்தியப் பிரதேச சட்ட மன்றத்திலும் அத்தகைய குற்றச்சாட்டு எதிர்க்கட்சி உறுப்பினர்கள் பலராலே, கொண்டுவரப்பட்டிருக்கிறது.

அரசாங்கம் காங்கிரசுக்கட்சிக்கு இத்தகையதோர் பண உதவி செய்வது தவறு என்று "டைம்ஸ் ஆப் இந்தியா" கண்டித்து எழுதுகிறது.

அடுத்தொரு குற்றச்சாட்டு — அதே மாநிலத்தில்!

இந்தூர் மாநாட்டை நடத்தியதற்காகக்காங்கிரசுக்கட்சி, அரசாங்கத்திடமிருந்து, ஒரு இடத்தை வாடகைக்கு வாங்கியிருந்ததாம். ஆனால் அந்த மாநாடு நடந்து, ஆண்டு ஒன்று ஆகியும், அந்த வாடகைத் தொகை இன்னமும் வசூலிக்கப்படவில்லையாம்!

காங்கிரசு ஆட்சிப் பொறுப்பிலே இருக்கிற காரணத்தால், இத்தகைய சலுகைகளையெல்லாம், அது பெற முடிகிறதே தவிர வேறென்ன?

இந்த நிலையினைக் கண்டித்து, நாகபுரியிலிருந்து வெளிவரும் இதவாதா (Hitavada) என்ற இதழ் எழுதுகிறது. இதோ அதன் கண்டனக் குரல்:—

"இந்தூர் மாநாடு நடைபெற்று, நீண்ட காலமாகியும், காங்கிரசுக் கட்சியினிடமிருந்து மத்தியப் பிரதேச அரசாங்கத்திற்கு வரவேண்டிய தொகை இன்னமும் வசூலிக்கப்படாமலிருப்பது, வியப்பிற்குரியது! இதுபோன்ற சலுகையை அரசாங்கம், மற்றக் கட்சிகளுக்கும் வழங்க முன்வருமா? காங்கிரசுக் கட்சிதான் ஆட்சியை நடத்துகிறது என்றாலும், பணம் பொதுமக்களைச் சார்ந்தது — எந்த அரசியல் கட்சிக்கும் சொந்தமானதல்ல!"

இந்த அளவு தில்லுமுல்லுகளை நடத்தி — மக்களது பணத்தைக் கட்சியின் வளர்ச்சிக்குப் பயன்படுத்திக்கொண்டு வருகிறது, காங்கிரசுக் கட்சி, அநேகமாக எல்லா மாநிலங்களிலும்!

இவ்வளவு ஊழலுக்குரிய செயல்களிலும் தன்னை ஈடுபடுத்திக்கொண்டிருக்கின்ற கட்சியினைச் சேர்ந்தவர்—அதன் மாநிலக்கிளையில் முக்கிய 'ஸ்தானம்' வகிப்பவர்களிலே ஒருவராக விளங்குபவர், "நாட்டிலே எதிர்க்கட்சி இல்லையே" என்று வருந்தினால் என்ன பொருள்?

எதிர்க்கட்சி இருப்பதனை, அவரும் அவர் சார்ந்திருக்கிற கட்சியும் சகிப்பதில்லை!

தப்பித் தவறி ஒரு எதிர்க்கட்சி இருக்கிறது — எழிலோடு, வளத்தோடு வளருகிறது — என்றால், பாவம் அவராலே பொறுக்க முடியாது! திகிலே பிறந்துவிடும்!

அந்தத் திகிலை மறைப்பதற்குத்தான் அடிக்கடி 'எதிர்க்கட்சியே இடையாது' என்கிறார்!

தி. மு. க.வை மறந்துவிட்டார்களே என்று, தமது 'வந்தே மாதரம்கள்' கூடக் கேட்டுவிடக் கூடாது என்பதற்காக, அதே கூட்டத்தில், மற்றொரு பொன் 'மொழியையும்' உதிர்த்திருக்கிறார்.

"தி. மு. கழகம் சினிமா, நாடகம், மேடைப் பேச்சு இவற்றிலேதான் திறமையுள்ளதே தவிர, அது ஒரு நல்ல அரசியல் கட்சியல்ல" என்றாராம் அவர்!

தி. மு. க. நல்லதொரு அரசியல் இயக்கமா அல்லவா என்பதைப் பற்றி மக்கள் புரிந்து கொண்டிருக்கிறார்கள்.—இந்த 'மதியூக' மந்திரியின் 'விளக்கம்' தேவையற்றது.

"தமிழகத்தை இனியும் புறக்கணிக்கக் கூடாது என்பதனை மத்திய அரசாங்கம் உணர்ந்து வருகிறது. வளர்ந்து வரும் தி. மு. க. வருங்காலத்தில் எந்த அளவு பலமுள்ளதாக ஆகிவிடுமோ என்ற பயம், இந்த உணர்வுக்கான காரணங்களிலே ஒன்று" என்று 'மெயில்' 15—4—58 இதழில் பெர்டினுக்ஸ் என்பவர் எழுதுகிறார்.

நமது சம்பத் பாராளுமன்றத்திலே முழங்குகிற முழக்கம், அங்கிருக்கிற எதிர்க்கட்சிகள் அனைத்தாலும் பாராட்டப்படுகிறது, வரவேற்கப்படுகிறது, என்றும் கூறுகிறார் பெர்டினுக்ஸ்.

இந்தப் பிரச்சனையில் சென்னை எடுத்திருக்கிற முடிவுக்கு, டில்லி தருகிற மதிப்பும்—கைத்தறித் துணிக்கு 'ரிபேட்' உயர்த்தப்பட வேண்டும் என்ற சென்னை அரசின் கோரிக்கைக்கு, 'அரை மனதோடாவது' டில்லி இணங்கியதும்—தி. மு. க. தமிழகத்தில் வளருவதாலே தான், என்கிறார் அவர்.

இவை எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தாற் போன்ற நிகழ்ச்சியொன்றினையும் அவர் குறிப்பிடுகின்றார்! இதோ அவரது வாசகங்கள்:-

"தேசிய வளர்ச்சிக் குழு, திட்டக் குழு ஆகியவற்றில் நடந்த விவாதத்தில், சென்னை நிதியமைச்சர் சுப்ரமணியம் நடந்து கொண்ட விதம், தமிழகத்து அரசியல் நிலைமைகளின் பிரதிபலிப்பு என்று இங்கு (டில்லி) அரசியல் வட்டாரங்களில் கூறப்படுகிறது. சென்னையின் கோரிக்கைகளை மத்திய அரசு அனுதாபத்தோடு பார்க்கவில்லையென்றால் விவாதத்திலிருந்து வெளி நடப்புச் செய்வதாகக் கடந்தமுறை நடந்தவிவாதத்தின் போது அமைச்சர்சுப்ரமணியம் பயமுறுத்தியதாகத் தெரிகிறது—மத்திய அரசும், அவரது கோரிக்கைக்கு இணங்கியது"

தமிழகத்து அமைச்சர், டில்லி அரசினைப் பயமுறுத்துகிறார் என்பது, இந்தப் பத்தாண்டு காலத்தில், காலம் கண்டிராத ஒரு அதிசயம்!

அந்த அதிசயம்-டில்லியைப் பயமுறுத்துமளவுக்கு அமைச்சர் பெற்றிட்ட-அஞ்சாமை தமிழகத்து அரசியல் நிலைமைகளின் பிரதிபலிப்பு, அதன் எதிரொலி.

என்ன பொருள் இதற்கு?

தி. மு. க. வின் வளர்ச்சி காங்கிரசுக்கு நடுக்கத்தினை ஏற்படுத்தியிருக்கிறது—அதனாலே மாநில அமைச்சர்களும், கொஞ்சம் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, தமது கோரிக்கைகளை டில்லி அரசிடம் எடுத்துக் கூறுகின்றனர்—மக்களது கோரிக்கைகளை அவரது அவலத்தை, ஆளுவோருக்கு எடுத்தியம்பி, ஆவன செய்கின்ற தி. மு. கழகத்தை அரசியல் கட்சியல்ல என்று அமைச்சர் சொன்னதாலே, மக்கள் "ஆம் ஆம்! அது அரசியல் கட்சியல்ல" என்று சொல்லிவிடப் போவதில்லை—அனைவரும்அறிவர்—அவரேகூட அறிந்திருக்கக் கூடும்.

ஆனால், தி. மு. க. அரசியல் கட்சியல்ல என்பதோடு நிற்காமல், "நல்லதோர் எதிர்க்கட்சி நாட்டில் இல்லையே" என்று 'ஜனநாயகப் போர்வை' போர்த்திக் கொண்டு உலவிட முயலுவதைப் பார்த்திடும் போதுதான் நமக்குப் பரிதாபமாக இருக்கிறது!

அவருக்குப் போர்த்தப்பட்டது பொன்னாடை! அதுபோதுமா? அமைச்சராயிற்றே அவர்? எனவே, அதன் மேலே ஜனநாயகப் போர்வையை அவராகப் போர்த்திக்கொள்ளப் பார்க்கிறார்!

★

# இதய ஒலி

முத்துமணாளன்

"பரிதாபம்! அரசாங்க ஊழியர் மனைவி விஷம் குடித்தாள்! சம்பளம் போதவில்லை! குடும்பம் பட்டினியாகக் கிடந்தது!!" — இது தலைப்பு — பெரிய எழுத்துக்களில்.

"குழந்தைகளின் பசியைப் பார்க்கச் சகிக்காமல் 5 குழந்தைகளுக்குத் தாயாரும், அரசாங்க ஊழியரின் மனைவியுமான ஆச்சி அம்மாள், அரளி விதையை அரைத்துக்குடித்து இறந்தாள்" —இது மேற்காணும் தலைப்பின்கீழ் கொடுக்கப்பட்டுள்ள செய்தி.

நாட்டில் நல்லதோர் மனிதனை —நற்பெயரும், புகழுடனும் திகழ்ந்து — வாழ்வை வளமிக்கதாகச் செய்யவந்த செம்மல்—என்றெல்லாம் இன்பக் கனவுகள் பல கண்டு கண்டு—குழந்தைக்கு இன்றுடன் வயது, மாதம் மூன்று—ஒரு ஆண்டு—ஐந்து ஆண்டு—இப்படியாக நாள் ஒவ்வொன்றையும் கணக்கிட்டு, தன் வறுமையையும் சற்று மறந்து இன்பமுறும் தாய், தான் பெற்ற செல்வம் பசி—பசி—என்று கதறித் துடிப்பதைச் சகியாமல் தற்கொலை செய்துகொண்டிருக்கிறாள் -ஓர் அரசாங்க ஊழியனின் மனைவி—சிதம்பரம் தாலுக்காவில்.

ஒருவரல்ல—இருவரல்ல. இது போன்று ஆயிரமாயிரம் அரசாங்க ஊழியர்கள், நம் தமிழ் நாட்டில் நாள்தோறும் சாகாமல் செத்துக் கொண்டிருக்கிறார்கள்.

"சம்பளம் போதவில்லை, சம்பளம் போதவில்லை" என்று கூக்குரலிடுகின்றனரே, ஆனால் தோற்றத்தில் அவ்வாறு துன்பப்பட்டுக் கொண்டிருப்பதாகத் தென்படவில்லையே என்றும் சிலர் நினைக்கக்கூடும். உண்மைதான். வெள்ளையும் சள்ளையுமாக ஆடை அணிந்துகொண்டு அலுவலகத்திற்குச் செல்லுகிறார்களே தவிர, மேலிருக்கும் ஆடையைக் கழற்றிவிட்டுப் பார்த்தால், உள்ளிருக்கும் ஆடை பல கிழிசல்களுடன் தான் காணப்படும். அது தன் வறுமையை மறைக்கும்மேலாடை என்றுதான் சொல்லவேண்டும். தன் வறுமையை வெளிக்காட்ட எவனும் விரும்பமாட்டான். இப்படி, மடிப்புக் கலையாத சலவைச் சட்டை அணிந்தாவது வறுமையை மறைக்க ஆசைப்படுகின்றனர் அரசாங்க ஊழியர்கள். ஒரு படி அதிகமாகச் சொல்லப் போனால், மாதத்தில் 15 தேதிக்குப் பின் வெறும் இரசத்திலேயே சோறுண்டு, நாட்களைக் கழிக்கும் அரசாங்க ஊழியர்கள் அநேகம் உண்டு.

கதிரவனின் கொடுமை தாளவில்லை—அதனால் குளிர்சாதனம் அமைக்கப்பட்ட "பங்களா"வேண்டும்—காரியாலய வேலை முடிந்தவுடன் அப்படியே காரில் பவனி வர ஒவ்வொரு அரசாங்க கெசட் பதிவில்லா ஊழியனுக்கும் மோட்டார் கார் வேண்டும்—என்றிவ்வாறு கேட்கவில்லை அவர்கள். தானும், தன் குடும்பத்தினரும், பட்டினியில்லாமல் சாப்பிட்டு, உடலை மறைக்க ஆடையும் அணிந்து - மனிதனாகவே நடமாடுவதற்கு வேண்டிய அளவு மட்டும் கூலி வேண்டும் என்கின்றனர்.

ஒரே இடத்தில் வேலை செய்யும் இரு அரசாங்க ஊழியர்களிடையே சம்பள விகிதத்தில் பெருத்த வேறுபாடு. மாநில அரசாங்க ஊழியன் ஒருவன் மாதம் ரூ. 79/ சம்பளம் பெறுகிறான் என்றால், மத்திய அரசாங்க ஊழியன் ரூ. 105/ பெறுகிறான். ஒரே ஊரில், ஒரு பொருளை இருவரும் ஒரே விலை கொடுத்துத்தான் வாங்குகிறார்கள். உணவு விடுதியிலும் இருவரும் ஒரேவிதமாகப் பணம் செலுத்தித்தான் சாப்பிடுகிறார்கள். இந்த நிலையில் மாநில அரசு ஊழியனுக்கு ஒருவித சம்பளம், மத்திய அரசு ஊழியனுக்கு இன்னொருவித சம்பளம். இதன்றி மாநில அரசாங்க ஊழியர்களைவிட மத்திய அரசாங்க ஊழியர்களுக்கு அதிகப்படியாகப் பல சலுகைகளும் அளிக்கப்படுகின்றன.

வேறுபாடின்றி, அநீதியின்றி, மாநில அரசாங்க ஊழியர்களுக்கும், ஓர் அளவு வாழ்க்கை நிலை உயர, மத்திய அரசு ஊழியர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பள விகிதத்தில் ஊதிய உயர்வு கொடுக்கப்பட வேண்டும் என்று சாமர்தான முறையில் — ஆளவந்தார்களால் வகுத்துக்கொடுக்கப்பட்ட "அகிம்சா" வழியில் முப்பது வருட காலமாக மாநாடுகள் பல கூட்டப்பட்டு, தீர்மானங்கள் பலப்பல தீட்டப்பட்டு, அரசாங்கத்திற்கு அனுப்பப்பட்டன, இன்றும்அனுப்பப்பட்டுக்கொண்டிருக்கின்றன—பயனில்லை.

காரணம் கேட்டால்-"பணவசதியில்லை. அதனால் மத்திய அரசாங்கத்தை எதிர்பார்க்கவேண்டியிருக்கிறது" என்று மாநில அரசு மத்திய அரசைச் சுட்டிக்காட்டுகிறது. "ஐந்தாண்டுத் திட்டங்களுக்கே கடன் வாங்கவேண்டியிருக்கிறது எங்கள் நிலைமை. எங்களிடமும்

பணமில்லை. மேலும் இந்தப் பிரச்சினை மாநில அரசாங்கமே தீர்க்க வேண்டியதொன்றாகும்'' என்று சாக்குப்போக்குச் சொல்லி மாநில அரசைச் சுட்டிக்காட்டுகிறது மத்திய அரசு. மாநில அரசாங்க கெசட் பதிவில்லாத ஊழியர்களின் இழிநிலையைக் கவனித்து ஆவன செய்ய இரு அரசாங்கங்களும் நடவடிக்கை எடுக்கவில்லை. அவர்களது இதய ஒலி—இதயக் குமுறல் — வீணே விண்ணில் சென்று மறைந்தொழிந்ததே தவிர, அரசாங்கத்தினர் தம் செவிகளுக்கு எட்டவில்லை. 1956ல் தமிழ்நாடு கெசட் பதிவில்லாத அரசாங்க ஊழியர்களின் தூதுக்குழு ஒன்று தங்கள் சமுகத்தினர் குறைகள் தீர்க்கப்படும் என்ற உறுதியான நம்பிக்கையுடன், டில்லி மாநகர் சென்றது நேரு பண்டிதரைப் பேட்டி காண. ''தரிசனம்'' கொடுக்கவே மறுத்துவிட்டார் ''ஆசிய ஜோதி''. அயல்நாட்டு விருந்தினர்களை வரவேற்கவே நேரம்போதவில்லை என்றகாரணத்தாலோ, தமிழ்நாட்டில் உள்ள அரசாங்க ஊழியர்கள் சிக்கனமாகச் செலவு செய்கிருர்கள், அதனால் அவர்களுடைய சம்பளத்தை உயர்த்தவேண்டிய அவசியமில்லை என்ற காரணத்தாலோ — தெரியவில்லை; பேட்டி காணவே மறுத்துவிட்டார் ''ஆபத்பாந்தவர்.''

''N G. Os are the back bone of Administration — அரசாங்கத்தின் முதுகெலும்பு போன்றவர்கள் கெசட் பதிவில்லாத அரசாங்க ஊழியர்கள்'' என்றெல்லாம் பலவாருக வருணிக்கப்பட்டு, அவர்களின் உழைப்பும், திறமையும் அரசாங்கத்தினரால் பாராட்டப்படுகின்றன. ஆயினும் மனம் இல்லை அரசாங்கத்துக்கு அவர்களுடையவாழ்க்கைநிலையை உயர்த்த.

அரசாங்கத்தின் முதுகெலும்பு போன்றவர்களின் முதுகெலும்பே கூனி, குறுகி, ஒடிந்துபோகும் நிலையிலிருக்கும்போது ஐந்தாண்டுத் திட்டங்கள் பல தீட்டப்பட்டு என்ன பயன்? திட்டங்கள் நல்ல முறையில் செயல்பட, அரசாங்க ஊழியர்களின் ஒற்றுமைஉணர்ச்சியுடன் கூடிய, மாசு இல்லா உண்மைத் தொண்டு அவசியம் என்று சொல்லத் தேவையில்லை. திட்டங்களை நிறைவேற்றும் ஊழியர்களின் உயிர் ஊசலாடிக்கொண்டிருக்கும் போது, திட்ட ஆக்க வேலைகளில் அக்கரையுடனும் உற்சாகத் துடனும் வேலை செய்ய முனைவார்களா? இப்படி இருந்தால் திட்டங்கள் எங்ஙனம் வெற்றியடையும்? ஆகவே இந்தப்பிரச்சினை ஒருகுறிப்பிட்டமக்களைமே அன்றி, நாட்டு மக்கள் அனைவரையும் பாதிக்கும் தன்மை வாய்ந்துள்ளதாக இருக்கிறது.

பரிதாபச் சிந்து மட்டும் பாடத் தவறுவதில்லை அமைச்சர்கள், சில இக்கட்டான நிலைமைகளில் அகப்பட்டுக்கொள்ளும் சந்தர்ப்பங்களில் ''ஊதிய உயர்வு அளிக்கப்படுவது நீதிதான் — நியாயம் தான் — ஆனல் பணமில்லை'' ஐந்தாண்டுத் திட்டங்களுக்கு மட்டும் பணம் கோடி கோடியாகத் திரட்டப்படுகிறது. பயனளிக்காத திட்டங்களுக்கெல்லாம் கோடி கோடியாகப் பணம் நாசமாக்கப் படுவதற்குக் கொட்டிக் கொடுக்க வசதியிருக்கிறது, வாய்ப்பு இருக்கிறது. ஆனல் இன்று உயிர் போகும் நிலையிலுள்ள அத்தியாவசியமாக—அவசரமாகக் கவனிக்கப்பட வேண்டிய பிரச்சினைக்குப் பணம் கொடுக்க வழியில்லை. நாட்டு மக்களின் வாழ்வை வளமாக்கத்தான ஐந்தாண்டுத் திட்டங்கள் தீட்டப்படுகின்றன. நாயினும் கேடான நிலையில் உள்ள அதே மக்களாகிய கெசட் பதிவில்லாத அரசாங்க ஊழியர்களின் வாழ்வைச் சீர்படுத்த மட்டும் திட்டங்கள் ஏதும் இல்லை. திட்டங்களை நிறைவேற்றப் பணம் போதவில்லை என்றவுடன், சிறு சேமிப்புத் திட்டம் என்று ஒன்று தீட்டப்பட்டு கோடி கோடியாகப் பணம் ஏழைப் பொதுமக்களிடமிருந்தும் திரட்டப்பட்டது. அது போல் அல்லற்படும் அரசாங்க ஊழியர்களுக்கும் ஒரு சிறு சேமிப்புத்திட்டம் ஒன்றுஏற்படுத் தப்படட்டுமே—இதுபோன்ற எத்தனையோ வழிகள் உள்ளன.

தமிழ்நாடு கெசட் பதிவில்லாத அரசாங்க ஊழியர்களின் வாழ்க்கைத் தரம் மிகமோசமான நிலையில்தான் உள்ளது. அவசியம் கவனிக்கப்படவேண்டிய பிரச்சினையுமாகும். அதுதான் நீதியும் நேர்மையுங்கூட-இப்படிக் கருதும் அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் ''என். ஜி. ஓ. வின் கோரிக்கையில் மாற்றுக்கட்சிகள் தலையிட்டால், அது தீர்க்கப்படாது, நீடித்துக் கொண்டேதான் போக நேரிடும்'' என்று வெளிப்படையாகப் பகன்றுள்ளார்.

அமைதியான முறையில் பல ஆண்டுகளாக, தீர்மானங்கள் போட்டு அனுப்பி, பல் வகையில் கெஞ்சிக் கூத்தாடிக் கேட்டார்கள். செவிசாய்க்கவில்லை அரசாங்கம். கடைசியில் முதல் மந்திரி கனம் காமராசர் அவர்களையும் மாநாடு ஒன்றினுக்கு வரவழைத்துக் குறைகளைக் கொட்டி அழுதார்கள். கவனிப்படவில்லை. பொறுத்திருந்து பார்த்து, தீரச் சிந்தித்துக் கடைசியில் ஓர் வழியைக் கண்டார்கள்.

எதிர்க்கட்சித் தலைவர்கள் மூலமாவது தங்கள் காரியத்தைச் சாதித்துக்கொள்ள முயலுவோம் — என்ற வழிதான் அது. அதே போல் மதுரையில் மாநாடு கூட்டப்பட்டு, எதிர்க்கட்சித் தலைவர்கள் அழைக்கப்பட்டு, அவர்களிடம் தங்கள் குறைகளை எடுத்துச் சொன்னுர்கள். அதன் பயனுகச் சந்தர்ப்பம் கிட்டும்போதெல்லாம் தி. மு. க. தலைவர்களும், மற்றும் இதர எதிர்க்கட்சித் தலைவர்களும், போராடி வருகிருர்கள் அவர்களுக்காக. இதைக் காரணமாகவைத்துக்கொண்டு, எதிர்க்கட்சித் தலைவர்கள் தலையிட்டால் பிரச்சினை நீடிக்கவிடப்படும் என்ற மிதவாத — சர்வாதிகார அரசியல் பண்பு நீடித்தால் இனி அரசாங்கஊழியர்களும் ஓர் எதிர்க் கட்சியாகத்தான் இயங்க நேரிடும் என்று அரசாங்கம் இனியாவது உணரட்டும். அவர்களது இதய ஒலி, கடல் அலையாக மாறி, பின் எரிமலையாக உருவெடுக்கும்அளவு பிரச்சினையை நீடிக்கவிடாதுமாநில அரசு உடனடியாக ஓர் வழிகண்டு ஆவன செய்யவேண்டும்.

தொழிலாளிகள் குருதி சிந்திப் போராடி வெற்றியடைந்தது ஒரு மே திங்களில்தான். சர்வாதிகாரி ''ஜார்'' ஆட்சி கவிழ்க்கப்பட்டதும் ஒரு மே திங்களில்தான். அத்தகைய புரட்சித் திங்களாகிய வரும் மே 15ல் தமிழ்நாடு கெசட் பதிவில்லாத அரசாங்க ஊழியர்களின் போராட்டம் துவங்க இருக்கிறது. இக்கட்டான இந்நிலையில் இனிக் காலம் கடத்திக்கொண்டே போனல் ஆபத்தும் அதிகரித்துக் கொண்டேதான் போகும்.

★

# மேதை துஸிடிடெஸ்

**மலர்மன்னன்**

இங்கிலாந்தின் இணையற்ற அறிஞனும் வரலாற்றுசிரியனுமான மெக்காலே, ஒரு இடத்தில் ''இதுவரை இருந்திருக்கின்ற வரலாற்றுசிரியர்கள் எல்லோரைக் காட்டிலும் துஸிடிடெஸ் தான் மேம்பட்டவன்'' என்று வாயாரப் போற்றுகிருன். மெக்காலே மட்டுமல்ல; இப்பரந்த மாநிலத்தில் பிறந்துள்ள பேரறிஞர்கள் யாவருமே 'துஸிடிடெஸ்தான் மாபெரும் வரலாற்று ஆசிரியன்' என்று சிறிதும் ஐயத்திற்கிடமின்றிக்கூறுவார்கள். அறிவுலகம் 'வரலாற்றுக்கு இலக்கணம் அமைத்துக் கொடுத்தவன்' என்று அவனைப் புகழ்கின்றது.

சிந்தனை உலகிற்கு ஒரு ஸாக்ரட்டிஸையும், அரசியலுலகிற்கு ஒரு பிளேட்டோவையும், வீரருலகிற்கு ஒரு அலெக்ஸாண்டரையும், விஞ்ஞான உலகிற்கு ஒரு டெமோக்கிரிடெஸையும் நல்கிய கிரேக்கம்தான் வரலாற்றுலகிற்காக ஒரு துஸிடிடெஸையும் தந்தது.

கிரேக்கம் அந்த நாளில் பல பிரிவுகளாகப் பிரிந்து இருந்தது. அப்படிப்பட்ட பிரிவுகளில் ஏதென்சும் ஒன்று. ஏதென்சை ''ஜனநாயகத்தின் தொட்டில்'' என்று பெருமையாகக் கூறுவார்கள், முதன் முதலில், உலகத்தில் முதிர்ச்சியடைந்த ஜனநாயகம் மலர்ந்தது அங்கேதான். அந்த ஏதென்ஸில்தான் கி. மு. 471-ல் மேதை துஸிடிடெஸ் தோன்றினுன். துஸிடிடெஸ் பிறந்த குடும்பம் நல்ல செல்வமும் செல்வாக்கும் பெற்று விளங்கிய குடும்பம். கிரேக்கத்தின் வடதிசையில் இருந்த திரேஸ் என்ற மாகாணத்திலிருந்த தங்கச் சுரங்கங்கள் சிலவற்றினின்றும் தங்கத்தைப் பெறும் பாத்தியதை அந்தக் குடும்பத்தினருக்கு இருந்தது. துஸிடிடெஸின் தகப்பன் ஆலோரஸ் என்பவன், துஸிடிடெஸ் ஒரு சான்றோன் எனக்கேட்டு ஈன்ற பொழுதிற் பெரிதுவந்த தாய் யாரோ, தெரியவில்லை.

''வரலாற்றின் தந்தை'' என்று நாளைக்கும் போற்றப்படும் ஹெரொடோட்டஸும் சிந்திக்கக் கற்றுக்கொடுத்த ஸாக்ரட்டிஸும், பேரறிஞன அனக்ஸ்கோரஸும் ஏதென்ஸ் நகரின் வீதிகளில் வலம் வந்து கிரேக்கத்தின் பெருமையை அதிகரிக்கச் செய்த காலத்திலேதான் இவனும் வாழ்ந்தான். பேரறிஞன் அனக்ஸ்கோரஸை ஆசானுகக் கொண்டு கல்வி கற்பதுதான் பெருமைக்குரியது என்று அக்கால கிரேக்க இளைஞர்கள் எண்ணி வந்தார்கள்.

கிரேக்க மகான் ஸாக்ரட்டீஸ்கூட இவனிடத்தில்தான் கல்வி பயின்ருன். நம் துஸிடிடெசும், எல்லோரையும்போல் தானும், அனக்ஸ்கோரஸிடம் மாணவனுகச் சேர்ந்தான்.

'ஏதென்ஸ் அரசாங்கத்தின் ஒவ்வொரு ஏதென்ஸ் இளைஞனும் இராணுவக் கல்வி கற்றாக வேண்டும்' என்ற சட்டத்தின்படி ஏட்டுக் கல்வியை முடித்துக்கொண்டதும் இராணுவக் கல்வி கற்கலானுன். இராணுவப் பயிற்சி துஸிடிடெஸை போர் நுட்பங்களை நன்கறிந்த தளகர்த்தனுகவும் சிறந்த ராஜதந்திரியாகவுமாக்கிற்று.

மேதை துஸிடிடெஸ் ஏதென்ஸின் தலைசிறந்த அறிவாளிகளுடன் தொடர்பு கொண்டான். அவர்களுடன் கூடி உரையாடி, தன் அறிவை மேலும் விரிவாக்கிக்கொண்டான்.

அன்றைய கிரேக்கம் பல பிரிவுகளாகப் பிரிந்து கிடந்ததென்று முன்பே சொன்னேமல்லவா? ஒவ்வொரு பிரிவும் தனித்தனியே அரசாட்சி செய்து வந்தது. இவ்வாறு கிரேக்கம் பல துண்டுகளாக இருந்த காலத்திலேதான், பாரசீகம், 'பிரிந்து கிடக்கும் கிரேக்கத்தை எளிதில் கைப்பற்றிவிடலாம்' என்று பேராசைகொண்டு பெரும்படை திரட்டி வந்தது. ஆனல் அதன் மனக்கோட்டை கிரேக்கத்தால் தரைமட்டமாக்கப்பட்டது. பிரிந்துகிடந்த கிரேக்கம், பகைவனை முறியடிக்க ஒன்றுபட்டு எழுந்தது. பாரசீகம் படுதோல்வியடைந்தது. தங்கள் பொதுப் பகைவனை புறங்காண, தங்களுக்குள் இருந்த மனத்தாபங்களையெல்லாம் மறந்துவிட்டு, ஒன்றுபட்ட கிரேக்க நாடுகள் அந்தப் பகைவனைத் தோற்கடித்தானதும், மறுபடியும் முன்போலவே ஒன்றுக்கொன்று எதிர்த்துக்கொள்ளத் தொடங்கின. கிரேக்க நாடுகள் இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிந்தன. ஒன்று ஏதென்ஸ்; மற்றொன்று ஸ்பார்ட்டா.

ஏதென்ஸ், தன்னை ஆதரித்த நாடுகளை யெல்லாம் சேர்த்துக் கொண்டு 'டெலோஸ் கூட்டமைப்பு' என்ற பெயரில் ஒரு சமஷ்டியை அமைத்தது. அதே போல, ஸ்பார்ட்டாவும், தன்னை ஆதரித்த நாடுகளை யெல்லாம் சேர்த்து 'பொலெப் பொனேசியக் கூட்டமைப்பு' என்ற பெயரில் ஒரு சமஷ்டியை ஏற்படுத்திக் கொண்டது. இரண்டு சமஷ்டிகளும், ஒன்றையொன்று குற்றம் சாட்டிக் கொண்டு, போர்க்களத்தில் இறங்கின. இரண்டு சமஷ்டிகளுக்கும் நடைபெற்ற இந்தப் போராட்டம் கிரேக்கத்தின் வீழ்ச்சிக்குக் காரணமாயிருந்தது. சீரும் சிறப்பும், பெரும் புகழும் பெற்றுத் திகழ்ந்த கிரேக்கத்தின் அழிவுக்கு அடிகோலிய இந்தப் போரை, பொலாப் பொனேசியப் போராட்டம் என்பார்கள்.

இந்தப் போராட்டத்தில் நம் துஸிடிடெஸும் கலந்துகொண்டான். தன் தாயகத்தின் வெற்றிக்காகக் கடற்படைக்குத் தலைமை தாங்கினன். ஏதென்ஸ் இவனை, தாஸோஸ் என்ற தீவிற்குப் போய், கடற்படையுடன் தங்கியிருக்குமாறு ஆணையிட்டது. தாய் நாட்டின் ஆணைப்படி, தாஸோஸுக்குப் போய் தன் உறையுளை அமைத்துக்கொண்டு, எதிரிப் படைகளுக்குத் தன் நாட்டுப் பகுதிகளைப் பறிகொடுத்துவிடாமல் பாதுகாத்தான். இவன் எவ்வளவோ முயன்றும், ஆம்ப்பிபோலீஸ் என்ற நகரம் மட்டும் எதிரிகள் வசம் சிக்கிவிட்டது.

ஏதென்ஸின் வெற்றிக்காக உயிரையும் துச்சமெனக் கருதி அரும்பாடு பட்ட துஸிடிடெஸைப் பாராட்டவேண்டிய ஏதென்ஸின் மக்கள் சபை, ஆம்ப்பிபொலிஸ் பறிபோனதற்கு அவன்தான் காரணம் என்று அபாண்டமாகப் பழிசுமத்தி, அவனை நாடு கடத்தியது. நல்லவர்கள், நாட்டு மக்களுக்கு நல்லறிவு புகட்டுபவர்கள், எல்லோருமே நிகழ் காலத்தில் தியவர்களாகத்தான் கருதப்பட்டு வந்திருக்கிறார்கள். அறிஞர்களுக்கு நிகழ்காலம் என்றுமே எதிராளியாகத்தான் இருந்துவருகிறது. ஸாக்ரட்டீஸுக்கு நச்சுக் கோப்பையையும், சமுதாய ஒப்பந்தத்தைத் தந்த ரூஸ்ஸோவிற்கு 'பைத்தியக்காரன்' என்ற பட்டத்தையும், ஏசுநாதருக்குச் சிலுவையையும், நபிகள் நாயகத்திற்கு கல்லடியையும், காந்தியடிகளுக்குத் துப்பாக்கிக் குண்டுகளையும் பரிசாகத் தந்த உலகம், துஸிடிடெஸை மட்டும் சும்மா விட்டுவிடுமா?

அறிஞன் துஸிடிடெஸ் எங்கெங்கெல்லாமோ அலைந்து திரிந்து தன் அறிவையும் அனுபவத்தையும் பெருக்கிக் கொண்டான். ஆழ்ந்த சிந்தனைகளில் மூழ்கி, தன் மனத்தைப் பளிங்கைப்போல் தெளிய வைத்துக்கொண்டான். இந்தக் காலத்திலேதான் இவனுக்கு, ஏதென்ஸுக்கும் ஸ்பார்ட்டாவுக்கு மிடையே நடைபெற்றதும், தான் பங்கு கொண்டதுமான பெலொப் பொனேசியப் போராட்டத்தைப் பற்றிய விரிவான சரித்திரத்தை எழுத வேண்டுமென்ற எண்ணம் பிறந்தது. அதற்கான தகவல்களையெல்லாம் திரட்டுவதிலேயே, தன் தேசப் பிரஷ்ட காலத்தைச் செலவிட்டான் இவன்.

வரலாறு எழுதுவதென்பது எல்லாச் சௌகரியங்களும் நிரம்பியுள்ள இந்தக் காலத்திலேயே மிகவும் சிரமமானது. துஸிடிடெஸ் எவ்விதத் துணையுமின்றி, தானொருவனாகவே பெலொப் பொனேசியப் போரின் சரித்திரத்தை எழுதியிருப்பதைப் பாராட்டாமலிருக்க எவராலும் முடியாது.

துஸிடிடெஸ் ஒரு ஏதென்ஸ் நாட்டவன். பெலொப்பொனேசியப்போரோ, அவனுடைய தாயகமான ஏதென்ஸுக்கும், ஸ்பார்ட்டாவுக்கும் நடைபெற்றது. அதுமட்டுமல்ல; துஸிடிடெஸும் அந்தப் போரில் ஈடுபட்டு, ஸ்பார்ட்டா படைகளுடன் போர் புரிந்திருக்கிறான். வாசகர்கள் இந்த இடத்தில் சற்றுச் சிந்தித்துப் பார்க்கவேண்டும்; தனது தாய்நாட்டிற்கும் எதிரி நாட்டிற்கும், நடைபெற்ற போரைப்பற்றி அந்தப் போரில் கலந்துகொண்ட ஒருவன் எழுதுவானேயானால் நிச்சயமாக அவனது எழுத்துக்களில் நடுநிலைமையைப் பார்க்க முடியாது. ஆனால் மேதையான துஸிடிடெஸ், ஒரு வரலாற்று ஆசிரியன், நீதிபதியைப்போல் நடந்துகொள்ள வேண்டுமென்பதை அறிந்தவனாதலால், தன் தாயகத்தை ஒரேயடியாகவானளாவப் புகழ்ந்து, அதன் பக்கம் எள்ளளவு தவறும் இல்லை என்று சாதித்தோ, அதே சமயத்தில், தனது பகை நாட்டை மட்டப்படுத்தி, எல்லாப் பழிகளையும் அதன் தலையில் போட்டோ எழுதவில்லை. இந்த நேர்மை, துஸிடிடெஸ் போன்ற, 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற மனப்பான்மை கொண்ட மேதையர்களிடம் மட்டுமே காணப்படும்.

துஸிடிடெஸின் நூலில் எந்தப் பக்கத்தைப் புரட்டினாலும் சொற்பொழிவுகளாகவே இருக்கின்றன, இவன் தளபதிகள், மக்கள் சபை உறுப்பினர், தூதுவர்கள், பிரதிநிதிகள் முதலியோர் தத்தம் கருத்தைப் பேசுவது போலவே தன் நூலிற் பெரும்பகுதியை எழுதியிருக்கிறான். அதன் காரணமாக இந்த நூல் ஒரு நாடகம் போலவே இருக்கிறது. ஏதென்ஸின் தளபதிகள், பிரதிநிதிகள் முதலியவர்களின் வாயிலாக, இவன் தனது தாய்நாட்டுப்பற்றை வெளிக்காட்டுகிறான். அதே சமயத்தில், ஸ்பார்ட்டாவின் பிரதிநிதிகள் முதலானவர்களது வாயிலாக ஸ்பார்ட்டாவையும் போற்றி எழுதியிருக்கிறான்.

இவனது நூலில்சொற்பொழிவுகள் மண்டிக்கிடப்பதிலிருந்து, இவன் ஒரு சிறந்த நாவலனென்றும் பேச்சுக் கலையின் இலக்கணத்தை நன்குணர்ந்தவன் என்றும் ஊகிக்கலாம்.

துஸிடிடெஸின் நூல் சொற்பொழிவாற்றும் திறமையைப் பெறவேண்டுமென்ற ஆவலுள்ளவர்கள் எல்லோரிடத்திலும் இருக்கவேண்டிய நூல். இந்த நூல் எத்தனையோ பெரிய பெரிய நாவலர்களையெல்லாம் உருவாக்கியிருக்கிறது. டெமாஸ்தனிஸ் என்ற பெரும் பேச்சாளன், இவனது நூலைப் பலதடவை நகல் செய்து தன் பேச்சுத் திறமையை வளர்த்துக் கொண்டானாம். ரோமின் பேரரசனை ஐந்தாவது சார்லஸ் இவனது நூலைப் பலமுறை படித்துப் படித்து அறிவாளியானான். அரசாங்கத்தில் பெரும் பதவிகளை வகித்தவர்களும், போர்ப்பிரச்சாரகர்களும் இவனது நூலை எங்கே போவதானாலும் கூடவே எடுத்துப் போவார்களாம். மேனாட்டு அரசியல்வாதிகளெல்லோரும் துஸிடிடெஸின் நூலைக் கற்றறிந்தால் தான் மதிப்பு என்று கருதினார்கள்.

போரைப்பற்றிய தகவல்களைத் திரட்டுவதிலும்,பிறகு அவற்றைக் கோர்வையாக எழுதுவதிலும்தன் வாழ்நாளில் பெரும் பாகத்தைச் செலவிட்ட துஸிடிடெஸ், தான் துவங்கிய வேலையைச்சரிவரக்கூட முடிக்காமல், கி. மு. 400-ல் திடீரென்று காலமாகிவிட்டார்.

"துஸிடிடெஸுக்கு இணையாக வரஎந்த வரலாற்றாசிரியனாலும் இயலாது" என்று தீர்மானமாகக் கூறுகின்றான் மெக்காலே. "துஸிடிடெஸை நாம் காணவேண்டுமானால் நாம் பெலொப் பொனேசியப் போரைப் படித்தாகவேண்டும்" என்கிறான், மற்றொரு மேதை. உண்மையான வார்த்தை: உண்மையான துஸிடிடெஸை நாம் பார்க்கவேண்டுமானால், அவனது நூலைப் படித்தாக வேண்டும். அதில்தான் அவனைத் தெளிவாகக் கண்டறிய முடியும்.



கிரேக்கம் மூன்று தலை சிறந்த வரலாற்றாசிரியர்களைத் தோற்றுவித்தது. அந்த மூவரையும், வரலாற்றறிஞர்கள் 'முப்பெரும் வரலாற்றாசிரியர்கள்' என்று போற்றுவார்கள். இந்த மூவரில் முதல்வன் ஹெரொடோட்டஸ். இவனை 'வரலாற்றின் தந்தை' என்று அழைப்பார்கள். துஸிடிடெஸ்தான் அடுத்தவன். இவனை, 'வரலாற்றுக்கு இலக்கணம் வகுத்தவன் என்று சொல்வார்கள். கடைக்குட்டி, ஜெனொபன். இவனை துஸிடிடெஸின நூலை நல்ல முறையில் திருத்தி, வெளியிட்டவன்' என்று அறிவுலகம் பாராட்டுகிறது.

துஸிடிடெஸின் எழுத்துக்கள் ஆழ்ந்த கருத்துக்களை உள்ளடக்கியவை. உன்னி உன்னிப் படிப்பவர்களுக்கு மட்டுமே,துஸிடிடெசின் நூல் மகிழ்ச்சியைத்தரும். எனவே, சிலர், "அப்படியென்ன எழுதிவிட்டான் இவன்! என்று கூறிவிடுவதுண்டு.

துஸிடிடெஸின் காலம், கிரேக்கம் புகழேணியின் உச்சியில் வீற்றிருந்த காலம்: கிரேக்கம் நாகரிகத்தின் எல்லையில் நின்ற காலத்தில் துஸிடிடெஸ் வாழ்ந்திருக்கிறான். ஆனால் அவனது நூலில் அதன் சாயல் துளியளவுமில்லை. கிரேக்கத்தின் அப்போதைய சிறப்பான அம்சங்களை இவன் தன் நூலில் காட்டவில்லை; ஆனால் அவன் காலத்தில் கிரேக்கத்தில் பரவிய மிகக் கொடிய நோயொன்றைப் பற்றி விரிவாகஎழுதியிருக்கிறான்!

துஸிடிடெஸின் நூல் முழுவதும், போர்க்களம், போரைப் பற்றிய வாக்குவாதங்கள் நிகழும் சபை, இவற்றாலேயே பின்னப்பட்டிருக்கிறது. இது இலக்கிய உள்ளம் படைத்தவர்கட்கு வெறுப்பைத் தருவதாக இருக்கலாம். வரலாற்று ஆசிரியர்களாலும், பேச்சாளர்களாலும்தான், அவனது நூலின் சிறப்பையும், அவன் எத்தகைய அருஞ்செயலைச் செய்திருக்கிறான் என்பதையும் அறிந்து கொள்ள முடியும்.

துஸிடிடெஸ் உலகிலுள்ள இளைஞர்களெல்லாம் நாவன்மை மிக்கவர்களாக, ஒரு சிறந்த நூலைத் தந்து விட்டுப் போயிருக்கிறான்; அந்த நூல் மேனாட்டு மொழிகள் எல்லாவற்றிலும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன.

தமிழ் நாட்டு இளைஞர்கள் சிறந்த பேச்சாளர்களாக வேண்டுமென்ற பேரவாக்கொண்ட நல்லறிஞர் வெ.சாமிநாதனவர்கள்,மேதை துஸிடிடெஸின் நூலைத் தமிழ்ப் படுத்தித் தந்திருக்கிறார்கள். அந்தச் சிறந்த நூலைப் பயன் படுத்திக்கொள்வது தமிழர்களின் முதற்கடமையாகும்.

★

# முயற்சியும் பயனும்

"அன்பு"

"தோழீ!"

"என்னம்மா? ஏன் வாட்டமுற்றிருக்கிறாய்? இப்போதுதானே உன் தலைவன் வந்து சென்றார்."

"தலைவன் நான் தினம் தினம் வந்து செல்கிறாரே...எவ்வளவு நாட்கள்தான் இப்படிக் களவொழுக்கத்திலேயே அவரைச் சந்தித்துக் கொண்டிருப்பது?...பெற்றோருக்குத் தெரிந்துவிட்டால் அப்புறம் இப்படி சந்திப்பதும் முடியாத செயலாகிவிடும்"

"ஏன் அவரிடம் திருமணத்தைப் பற்றி நினைவூட்டுவதுதானே?"

"நினைவூட்டித்தான் வருகிறேன். அவரும் முயற்சி செய்து கொண்டு வருவதாகத்தான் கூறுகிறார்...என்ன முயற்சியோ?"

"அப்படிக் கூறிவிடாதே! முயற்சியால் முடியாத செயலே இவ்வுலகில் இல்லை. முயற்சி திருவினையாக்கும். முயற்சி வெல்லும்..."

"போதுமடீ! பெரிய தத்துவம் தான்!"

"தத்துவம்இல்லையம்மா, உண்மை. கண்டறிந்த உண்மை"

"என்ன உண்மை, சொல்லு பார்ப்போம்."

"சொல்லுகிறேன் உன் தலைவர் உன் முகத்தை எதற்கு ஒப்பிட்டார்?"

"அதெல்லாம் உனக்கெதற்கடீ?"

"நீ சொல்லாவிட்டால் நான் சொல்லுகிறேன்! தாமரை போன்ற முகம் என்றுதானே கூறினார்?"

"குறும்புக்காரி! அதையெல்லாம் நீ எப்படிப் பார்த்தாய்?"

"பார்க்கவில்லையம்மா, கேட்டேன்!"

"சரி அவர் ஒப்பிட்டதற்கென்ன?"

"அவர் ஒப்பிட்டது சரியல்ல, முற்றிலும் தவறு! எப்படித் தெரியுமா? வண்டுகள் மதுவுண்ணும் தாமரையைப் போன்றதல்ல உன் வதனம்! மாறாக உன் வதனத்தைப் போன்றதுதான் இந்தத் தாமரை!! வேறுபாடு புரிந்ததா?"

"போடீ! பெரிய கண்டுபிடிப்புத் தான்"

"இதுவல்லக் கண்டுபிடிப்பு. இனி இதிலிருந்து வருவதுதான் கண்டுபிடிப்பு...இந்தத் தாமரை உன் முகச் சாயலை எப்படிப் பெற்றது தெரியுமா? முயற்சி, இடைவிடா முயற்சியின் விளைவே அது. முதன் முதல் உன் முகத்தைப் பார்த்ததும் 'நாம் அவள் முகத்தைப் போன்றில்லையே' என்று மிகவும் வருந்தி உன் முகத்தின் சாயலை எப்படியும் பெற்றுவிட வேண்டும் என்ற எண்ணமதைத் திண்ணமுற மனதில் கொண்டது. எண்ணினால் மட்டும் போதுமா? முயலவேண்டுமே! ஆகவே இடைவிடா முயற்சியுடன் தன் ஒற்றைக் காலில் நின்று தவம் புரியத் தொடங்கியது. கடைசியில் முயற்சியின் பயனாக உன் வதனத்தின் சாயலைப் பெற்றது! இருந்தும் ஒற்றைக்கால் நிலை மாறவில்லை!"

"அதுபோல..."

"அதுபோல உன் தலைவரும் அவர் முயற்சியில் பயனடைந்தே தீருவார். முயன்றால் இப்பாரில் முடியாதது என்று ஒன்றுமே இல்லை! உன்னை மணப்பார். மணந்த பிறகு அவர் முன்பு கூறிய உவமையைத் தவறென்று நினைத்து நான் கூறிய உண்மையை உணர்வார்!"

தன்துறைநீர் நின்ற தவத்தால் அளிமருவு
புண்டரிகம் நின்வதனம் போன்றதால்—
உன்போ
பயின்றால் உளம்பருகும் பன்மொழியாய்
பார்மேல்
முயன்றால் முடியாப் பொருள்.

★

# தூண்டுகோல்!

[ மாண்மகிழன் ]

—படிநி—

தூண்டுகோல் ஆக்கத்தின் அச்சாணி என்று சொல்லப்படுகிறது. தூண்டுகோலால் உலகு பெற்ற ஆக்கங்கள் பல. அவற்றுள் நம்மிடையே அடிபடும் டெலிபோனும் ஒன்று.

டெலிபோனை உலகத்திற்குத் தந்தவர் அலெக்சாண்டர் கிராகம் பெல் என்பது யாவருக்கும் தெரிந்திருக்கும். ஆனால் (பெல்லுக்கு) அவருக்கு டெலிபோனை கண்டுபிடிக்கத் தூண்டுகோலாய் இருந்தது யார் என்பது திட்டவட்டமாக எல்லோருக்குமே தெரிந்திருக்க நியாயமில்லை.

அத்தகைய ஒரு தூண்டுகோல் பெல்லுக்குக் கிடைத்திராவிட்டால், அவர் டெலிபோனைக் கண்டுபிடித்த பெருமையினைப் பெற்றிருப்பார் என்பது சந்தேகத்திற்குரியதுதான்!

ஏனென்றால் அவர் அத்தகைய இடர்ப்பாடுகளின் மத்தியிலே சிக்கி இருந்தார். ஆராய்ச்சி செய்துகொண்டிருந்த நேரங்களில் அவருக்கு மருந்துக்குக்கூட ஒருவர் உற்சாகமூட்டும் வார்த்தைகளை உதிர்த்தது இடையாது. ஆராய்ச்சிகளுக்குத் "தீனி" போட்டு உதவிய அவருடைய பிற்கால மாமனார் — அன்புடைக் காதலி — நண்பர்கள் — மற்றவர்கள் எல்லோருமே அவருடைய திட்டத்தைக் கண்டு நகைத்தார்கள். 'பகற்கனவு'—'கடைகாலற்ற மனக்கோட்டை' என்றெல்லாம் கூறி எள்ளி நகையாடினார்கள். இந்நிலையில் அவருக்கு ஏது தூண்டுகோல்? கேட்கத் தூண்டுகிறது! தூண்டுகோல் இருந்தது; வரும் பதில்! எப்படி—எங்ஙனம்? மீண்டும் எழும் ஐய வினாக்கள் இவை!

அப்பொழுது பெல்லுக்கு வயது இருபத்தைந்து இருக்கும். போஸ்டன் நகரத்திலே செவிடு நிவாரண ஆசிரியராகப் பணியாற்றி வந்தார். செவிடு நிவாரணத்தைத் துரிதப்படுத்தும் பல புதிய முறைகளைக் கையாண்டதோடு, ஓய்வுநேரங்களில் ஆராய்ச்சிகளும் செய்துவந்தார். இச்சமயத்தில்தான் இசைந் தந்தி ஆராய்ச்சியில் உயிரையே கொடுத்து வந்தார். மேலும தொடர்ந்து புதிய ஆராய்ச்சிகளிலே ஈடுபட மனமிருந்தும், பொருளாதாரத் தொல்லையால்மார்க்கமின்றித்துன்புற்று வந்தார். இதுவே அவருக்குப் பெருங் கவலையாகப் போய்விட்டது.

இதை அந்த நகரத்து மிகப் பெரிய பணக்காரரான அப்பார்ட் அறிந்தார். அவருக்கு இருந்த ஒரே ஒரு செவிட்டு மகள் கூட பெல்லிடம்தான் நிவாரணம் பெற்றுவந்தாள். பெல்லின்மேல் அவருக்கு, மகள்மேல் எவ்வளவு அன்பு இருந்ததோ, அவ்வளவு அன்பு இருந்தது. காரணம், பெல், தன் மகள் மேபலின் அருமைக் காதலன் என்பதால்தான்.

எனவே ஆராய்ச்சிகளுக்குப் பண ஒத்தாசை செய்ய முன்வந்தார். தன் மகளுக்கு, செவிடு நிவாரணம் தருவதற்கென்றே கண்டுபிடிக்கப்போகும் புதிய கருவிக்கான ஆராய்ச்சிகளே, பெல் உயிரைக் கொடுத்துச் செய்துவருபவை என்பதை அறிந்ததும், அவருக்கு மகிழ்ச்சி மேலிட்டது. தாராளமாக ஆராய்ச்சிகளுக்கு உதவி வந்தார்.

நாட்கள் நகர்ந்தவண்ணம் இருந்தன. ஆராய்ச்சிகளோ பயனின்றிச் சென்றுகொண்டே இருந்தன. எனவே சலிப்பு முளைத்தது. நகைப்புப் பிறந்தது!

ஆனால் பெல் மட்டும், காதலியின் குறையினைத் தீர்த்தே ஆகவேண்டும் என்ற குறையா ஆசையினால் தளராமல் முயன்றவாறு இருந்தார். அந்த முதிர்ந்த முயற்சியின் பயனால் டெலிபோனைக் கண்டுபிடித்தார். ஊர் அறிந்தது! பெல்லுக்கு புகழ்மாலைகளைச் சூட்டிக் கொண்டாடினார்கள்.

ஆனால் கடைசிவரை அவரால் தன் காதலியின் குறையைத் தீர்த்துவைக்கவே இயலவில்லை. அவரை, ஏளனத்துக் கிடையிலே—தரித்திரத்திற் கிடையிலே தொடர்ந்து சளைக்காமல் ஆராய்ச்சியில் இறங்கத் தூண்டியது, தன் காதலிக்கு உள்ள குறையை நீக்கவேண்டும் என்ற ஆவலாகிய தூண்டுகோல் என்று தான கூறவேண்டும். வேறென்ன கூறக்கூடும்?

பெல், தன் காதலியைக்கண்டு வெற்றிச் சிரிப்பு சிரித்தபோது "உலகமே புகழும் என் வாகைக்கு, தாரகையே நீதான் தூண்டுகோல் என்பதை யார் அறிவார்கள்" என்ற உண்மை ஒலிக்காமல் ஒலித்தது!

★

கலியாணமாகி வீட்டிற்கு நாட்டுப் பெண் வந்துவிட்டால் போதும்! தாயாரின் உரிமை உணர்ச்சி தனக்கே சொந்தம் என்ற மனப்பான்மை முழுச்சக்தியுடன் வெளிக்கிளம்பிவிடுகிறது. தன் பிள்ளை தன்னிடம் வைத்திருக்கும் அன்பிற்கு பங்காளியாக ஒருத்தி தோன்றிவிட்டாளே, பிள்ளை தன்னை அலட்சியம் செய்துவிடுவானோ என்றொரு பயம். நாட்டுப் பெண்ணும், இவர் அம்மா சொல்வதையே கேட்கிறாரே என்று நினைக்கிறாள். அந்த உரிமை உணர்ச்சியின் காரணமாக மாமியார் மருமகள் கலகங்கள் ஏற்பட்டு வீடு இரண்டுபடுகிறது. தாய்மார்களுக்கு இது மிக மிகப் பெரிய சோதனை காலம். புத்திசாலித்தனமாகவும், சாதுரியமாகவும் நடந்து கொள்ளவேண்டும். கற்றறிந்த பெண்கள் எப்படியோ சமாளித்து விடுகிறார்கள்.







4-ம் பக்கத் தொடர்ச்சி

அலுவல்கள் இல்லாமல் இருக்க வேண்டும்.

நான் கவனிக்காதபோது,அவைகள் எப்படி நடக்கின்றன, என்பதை நான் பார்க்கவேண்டும்."

இதற்காகவே ஓய்வு கேட்கிறார்! ஓய்வும், ஓராண்டுக்கோ ஈராண்டுக்கோ அல்ல—கொஞ்ச நாளைக்குத்தான், என்பதை அவரே தெளிவுபடுத்தியிருக்கிறார்!! டில்லியிலிருந்து வரும் சேதியொன்று, "மூன்று மாத காலத்துக்கே இந்த ஓய்வு", என்று கூறுகிறது.

இவ்வளவு காலம் பாடுபட்ட ஒரு தலைவர் மூன்று மாத ஓய்வு கேட்பது, உள்ளத்தை உணர்ச்சி வசப்படச் செய்யும் கட்டமாகும். நாட்டு மக்களின் மனதிலே இடம் பெற்றுவிட்ட அவர், அப்படிக் கேட்கிறபோது, நெஞ்சுருகும் நிலை பெறுவோர் ஏராளம் உண்டு. உணர்ச்சிக் கொந்தளிப்பால் 'கூடாது, கூடாது' எனக் கூறுவோரும், இருக்கவேசெய்வார்கள். நேரு அவர்களது அறிக்கையைப் படித்ததும் ஒரு உறுப்பினர் ஓடோடியும் சென்று, "இதென்ன இப்படி அணுகுண்டைப் போடுகிறீர்கள்?" என்று கேட்டிருக்கிறார்.

நாடே, இன்று பேசுகிறது அவர் அறிவிப்பு கண்டு! அவர் கேட்கும் ஓய்வுக்கும், ஒதுங்குவதற்கும் வித்தியாசம் புரியாமல் மயங்கிடும் மக்களும், உண்டு!

ஓய்வு பெறுவது என்பது சாதாரணமானதுதான். சர்ச்சில் துரைமகனார், பிரிட்டன் முதலமைச்சராகயிருந்த காலத்தில், கிராமத்திலிருக்கும் தனது உல்லாச வீட்டுக்கு அடிக்கடிப் போய்விடுவதுண்டு. ஐசனோவரைப்பற்றியும், ஓய்வுக்காக அங்கே போயிருக்கிறார் இங்கே போயிருக்கிறார் என்கிற செய்திகளை நாமஏடுகளில் காண்பதுண்டு.

நேரு அவர்களும், இதுபோல' ஓய்வு பெறலாம்! ஆனால், அவர் அதையும் ஒரு தேசியப் பிரச்னை ஆக்கியிருக்கிறார் — அந்த இடம் தான், நம் சிந்தனைக்கு வேலை கொடுக்கிறது!!

இரண்டு மாதம்--மூன்று மாதம் என்று அவர் வெளிநாடுகளுக்குப் போகிறபோதெல்லாம், இப்படி அவர் அறிக்கையேதும் வெளியிடுவதில்லை. போவார்! வருவார்! அப்போதெல்லாம், ஆட்சிக் காரியங்கள் நடக்காமலுமில்லை— எப்படி நடக்கிறது என்பதை வெளியிலிருந்து பார்க்கும் வாய்ப்பும் ஏற்பட்டிருக்கிறது.

இப்போதும், தனது பொறுப்புகளை சகாக்களிடம் ஒப்படைத்துவிட்டு, இரண்டு மூன்று மாதங்கள் இவர் போயிருப்பதென்றால் மறுப்பார் கிடையாது—ஒருசேதி, "நேரு அவர்கள் ஓய்வுக்காக இமயமலைச்சாரலுக்குப் போயிருக்கிறார்" என்று வெளியிட்டுவிட்டால் போதும்! இருந்தும் நேரு அவர்கள் இதனைப் பெரிதாகக் கருதுகிறார் — அவசரமாகப் பார்லிமெண்டு காங்கிரஸ் கட்சியைக் கூட்டி அங்கே அறிவிக்கிறார் — 'பரபரப்பும் பதைபதைப்பும் காங்கிரஸ் வட்டாரங்களில் உருவாக்கபபடுகிறது!!

வெகு எளிதில் முடித்துக் கொள்ளக் கூடிய இந்தக் காரியத்துக்காக, இவ்வளவு பெரிய பரபரப்பு உருவாக்கப் படுவதால், இதில் ஏதாவது உள்நோக்கம் உண்டோ என்று எண்ணுவோரும் இருக்கவே இருக்கிறார்கள்.

ஏனெனில், இன்று காங்கிரஸ் கட்சி உள்ள நிலையையும் — மத்ய பீடத்திலேயே உருவாகியிருக்கும் ஒருவர்க்கொருவர் தகராறையும் — ஒவ்வொரு மாநிலத்திலும் நடந்துகொண்டிருக்கும் குடுமிபிடிச் சண்டைகளையும் பார்க்கிற ஒருவருக்கு, "அப்பப்பா! இந்தக் கூச்சல்களே இல்லாத இடமாக ஒரு மூன்று மாதத்துக்குப் போய் இருந்து தொலைத்துவிட்டு வருவோம்" என்கிற சலிப்பு வரத்தான் செய்யும்.

இப்படி சலிப்புவரும் சட்டங்களிலெல்லாம் நேரு அவர்கள், அதிர்ச்சி வைத்தியம் செய்வதுண்டு. அவர் கைவசமுள்ள மருந்து, "நான் விலகிக்கொள்ளப் போகிறேன்! ஓய்வுப்பெறப் போகிறேன்!!", என்பதுதான். இதனால் பரபரப்பு பரவும்—மத்திய பீடத்திலிருப்போர் கூட நேருவை நாடி வேண்டாம் என்பார்கள்—வெளிநாடுகள் பேசும்—உள்நாடு எங்கும் பேசப்படும்—கடைசியில், வழக்கம் போலாகிவிடும்!!

இப்போது நேரு அவர்களும், அந்த அதிர்ச்சி வைத்தியத்துக்காகத்தான் இந்த அறிவிப்பைத் தந்திருக்கிறாரோ என்று ஐயம் கொள்வதில், பொருளில்லாமலில்லை.

அவர் ஓய்வுகேட்பதிலும், அதிலுள்ள உள்ளமுருக்கும் வாசகங்களையும், நாம் உணருகிறோம். அவருக்கு, இந்தப்பகண்டத்தின் வாழ்விலுள்ள அவசியத்தையும் நாம் அறியாமலில்லை. எப்போதும் அவருடைய தொண்டும் சேவையும், நமது மரியாதையைப்பெறுவதாகும்.

ஆனால், இதனையும் ஒரு 'அதிர்ச்சி வைத்தியமாக' அவர் கருதிடின், காங்கிரஸ் கட்சியின் கண்றாவிக்கோலமே நமக்குத்தெரிகிறது! கோஷ்டிச் சண்டைகளாலும், தலைவர்களுக்குள்ளேயே பூசலாலும், கேடுற்றுவரும் அக் கட்சியை, "அதிர்ச்சி வைத்தியங்களா" காப்பாற்றிவிடும்—ஒரு போதுமில்லை!!

★

# பெங்களூர் மாநாட்டில்

—[★]—

அண்மையில் அமிருதசரசில்கூடிய இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி நிறைவேற்றிய தீர்மானத்தில், திராவிட முன்னேற்றக் கழகத்தை ஏசியிருப்பதை இம் மாநாடு கவனித்து, அந்தத் தீர்மானத்தின் அடிப்படையான காரணம், நம் வளர்ச்சியைக் கண்டு கம்யூனிஸ்டுகள் அடைந்துள்ள ஆத்திரம் தான் என்றும், அத்தீர்மானம், கம்யூனிஸ்டுக் கட்சியின் பலவீனத்தையே குறிக்கும் என்றும் கருதுவதுடன், கம்யூனிசத் தத்துவப்படி தேசிய இனங்களடங்கிய மாநிலங்களுக்குப் பேரரசிலிருந்து பிரிந்துபோகும் உரிமைக்காகப் போராடும் திராவிட முன்னேற்றக் கழகத்தை எதிர்க்கும் கம்யூனிஸ்டுகள் கொள்கைக் குழப்பத்தின் காரணமாகத்தான் இந்தப் பரிதாபத்துக்குரிய நிலையை அடைந்துவிட்டார்கள் என்றும் இம்மாநாடு கருதுகிறது.

*

பெங்களூர், கோலார், மற்றும் பத்திராவதி முதலிய ஊர்களில் குடிதண்ணீர் வசதிகளை செய்து தரத்தக்க திட்டம் தீட்டி செயல்படுமாறு மைசூர் அரசியலாரை இம்மாநாடு கேட்டுக் கொள்வதோடு, பத்திராவதியிலுள்ள அரசாங்கத் தொழிற்சாலையினின்று வரும் அசுத்த நீரை பத்திரா நதியில் ஊருக்கருகில் கலக்கவிடாமல் தக்க வசதிகள் செய்து தரவேண்டுமென்று இம்மாநாடு கேட்டுக்கொள்கிறது.

*

(அ) கருநாடகப் பகுதியில் ஆசுப்பேட்டை, சாந்தூர் முதலிய இடங்களில் எடுக்கப்படும் மாங்கனீசு, இரும்பு ஆகிய தாதுப் பொருள்களிலிருந்து மேற்படி உலோகங்களைப் பிரித்தெடுக்கும் தொழிற்சாலைகளை நிறுவி, அதன்மூலம்ஏற்றுமதியைத் தடுத்து பாட்டாளிகளுக்கு வாழ்வளிக்க வேண்டுமென்று இம்மாநாடு டெல்லி ஆட்சியைக் கேட்டுக் கொள்கிறது.

(ஆ) வட கருநாடகத்தில் கிடைக்கும் சுரங்கப் பொருள்களை ஏற்றுமதி செய்வதற்கு தக்கபடி கார்வார் துறைமுகத்தை விரிவுபடுத்துமாறும் ஊப்ளியிலிருந்து தாதுப் பொருள்களை கார்வாருக்கு எடுத்துச் செல்வதற்கு எந்தவித வசதியும் இல்லாததால் அதிவிரைவில் ஊப்ளி — கார்வார்—தண்டாலே இரயில் பாதை அமைக்குமாறும் இம்மாநாடு மத்திய சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறது.

சாமராஜ நகரிலிருந்து சத்திய மங்கலம் இரயில் பாதை அமைக்க வேண்டும் என்ற திட்டத்தையும் துரிதமாக நிறைவேற்ற வேண்டுமென இம்மாநாடு வற்புறுத்துகிறது.

(இ) முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் முடிக்கப்பட்டிருக்கவேண்டிய துங்கபத்திரா மேட்டு நிலக் கால்வாய்த் திட்டம் (Tungabadra High Level Canal Scheme) டெல்லி ஆட்சியின் பாரபட்சத்தால் இன்னும் துவக்கப்படாமல் இருப்பதையும், தொழில் வளர்ச்சிக்குத் தேவையான மின்சார உற்பத்திச் சாலைகள் இன்னும் முழு அளவு இயக்கப்படாமல் காலம் கடத்தப்பட்டு வருவதையும் இம்மாநாடு வன்மையாகக் கண்டிப்பதோடு, திட்ட வரையறைக்குரிய அந்தந்தக் காலத்திலேயே துரிதத்தோடு முடிக்குமாறு இம்மாநாடு மத்திய ஆட்சியை வற்புறுத்துகிறது.

**வெற்றிகரமாக நடைபெற்ற பெங்களூர் மாநாட்டில், நிறைவேற்றப்பட்ட முடிவுகளில், சில.**

(ஈ) மல்நாடு (Malnad) பகுதிகளின் வளத்தைப்பற்றியும், அவற்றைத் தென்னகம் முழுவதற்கும் எவ்வாறெல்லாம் பயன்படுத்த முடியும் என்பது பற்றியும் இம் மாநில அரசு பன்முறை டெல்லிக்கு எடுத்துணர்த்தியபோதிலும், காலஞ்சென்ற ரபி அகமது கித்வாய் இதைப்பற்றிக் கவனித்து ஆவன செய்வதாக வாக்குறுதி அளித்திருந்தபோதிலும், கிர்கியில் கூடிய மல்நாடு முன்னேற்ற மாநாட்டில் மூன்றும் முறையாக டெல்லி ஆட்சியின் கவனத்திற்கு இப்பிரச்சினைகளைக் கொண்டுவரும் நடவடிக்கை எடுத்துக்கொண்ட போதிலும், சுமார் ரூ. 5 கோடி செலவிலேயே மகத்தான முன்னேற்றம் அடைய முடியும் என்பதை மாநில நிபுணர்கள் வெளிப்படுத்திய பின்பும், டெல்லி ஆட்சி இத்துறையை அலட்சியப் படுத்துவதை இம்மாநாடு வன்மையாகக் கண்டிக்கிறது.

(உ) எட்டாண்டுகட்கு முன்னர் குடகு (Coorg) ஆட்சியினரால் டெல்லியிடம் சமர்ப்பிக்கப்பட்ட பாரபோல் நீர்ப்பாசன—மின் இயக்கத் திட்டத்தின் (Baropol Irrigation and Hydro - Electric Scheme) நீல நகல் (Blue Print) என்னவாயிற்று என்று இம்மாநாடு டெல்லி அரசைக் கேட்க விரும்புவதோடு, வடக்கில் பல நூறு கோடி ரூபாய்களால் சாதிக்கக் கூடியதைவிட அதிக நன்மையை ரூ. 19 கோடி செலவில் பாரபோல் திட்டத்தின் மூலம் பெற முடியுமென்று உணர்த்தப்பட்டிருந்த போதிலும், மத்திய சர்க்கார் இந்தத் திட்டத்தைக் கைவிட்டுவிட்டதை வன்மையாகக் கண்டிப்பதோடு, உடனடியாக இத்திட்டத்திற்கு வாய்ப்பளிக்குமாறு இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

*

(ஊ) இதுகாறும் துங்கபத்திரா அணைக்கட்டு திட்டத்திற்காக உருவாக்கப்பட்ட (Shutter Manufacturing Factory) நீர்த்தேக்க மதகு உற்பத்திச் சாலை இந்திய உபகண்டத்திலேயே மிக அரிய உற்பத்திக் கருவிகளைக் கொண்டதாக இருப்பதால் அதை மூடிவிடும் எண்ணத்தைக் கைவிட்டு விட்டு இயந்திரக் கருவிகள் உற்பத்திச் சாலையாக (Machine Tools Factory) அமைத்து வட கருநாடகத்தின் வேலையில்லாத் திண்டாட்டத்தை நீக்குமாறு இம்மாநாடு மத்திய அரசினரைக் கேட்டுக் கொள்கிறது.

*

(அ) தொழில் தகராறுகள் தற்போது மிக மிகத் தாமதமாக தொழில் கோர்ட்டுகளால் குறுகிய காலத்தில் தீர்க்கப்படாமல், குவிந்து கிடப்பதைக் குறித்து இம்மாநாடு வருந்துவதுடன், உடனடியாக ஆட்சியாளர்கள் இதுபற்றி ஆவன செய்யுமாறு இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

(ஆ) தொழில் தகராறுகள் விரைவில் தீர்க்கப்பட வேண்டுமென்ற காரணத்திற்காக திராவிடப் பகுதிக்கென்று தனி சுப்ரீம் தொழில் கோர்ட் நியமிக்க வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறது.

*

பெங்களூரை யொட்டி வளர்ந்துள்ள தேவர் ஜீவனஹள்ளியில் ஒரு பகுதியான உப்புமாநகருக்குப் 'பெரியார் இராமசாமி நகர்' என்று பெயரிட வேண்டுமென அப்பகுதி மக்கள் பெருவாரியானவர்களால் வலியுறுத்தப்பட்டிருந்தும், 1946-ம் ஆண்டு நடைபெற்ற பெங்களூர் மாநாட்டில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருந்தும் அரசியலார், இவ்வேண்டுகோளைக் கவனியாமல் இருப்பது குறித்து வருந்துவதுடன் உடனடியாக இதனை நிறைவேற்ற வேண்டுமென இம்மாநாடு வற்புறுத்துகிறது.

*

தென்னிந்திய இரயில்வே போன்ற துறைகளிலும், பெங்களூரில் மத்திய ஆட்சியின் சார்பில் நடத்தப்படும் (I. T. I., H. M. T., H. A. L., Bharat Electronics) போன்ற துறைகளிலும், முக்கிய நிர்வாகங்களுக்கு வட நாட்டினரை - பிரதேசத்தில் அத்துறை நிபுணர்கள் இருந்த போதிலும் - வடவரை அமர்த்துவதை இம்மாநாடு கண்டிக்கிறது; முடிந்தவரை இப்பிரதேசத்தவரையே அவற்றிற்கு நியமிக்க வேண்டுமென்று இம்மாநாடு கேட்டுக்கொள்கிறது.

*

தங்கவயலில் உள்ள சானிடரி போர்டை முனிசிபாலிட்டியாக மாற்றி அமைக்க வேண்டுமென்று இம்மாநாடு கருநாடக சர்க்காரை வற்புறுத்துகிறது.

*

நாகு நீர்த்தேக்கத்திலிருந்து வடியும் நீரைக்கொண்டு சிம்ஷா மின்சார நிலையத்தில் சேலும் 2 உற்பத்தி யூனிட்டுகளைச் சேர்த்தால் 22,800 - கில்லோ வாட்டுகள் மின்சாரம் அதிகப்படியாகக் கிடைக்குமென்று காட்டப்பட்ட போதிலும், அதை இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்காமல் இருப்பதை மத்திய ஆட்சியின் கவனத்திற்குக் கொண்டு வந்து, முன்னுக்கு சேர்க்கப்படும் திட்டங்களிலாவது இதற்கு வாய்ப்பளிக்கும்படி இம்மாநாடு வற்புறுத்துகிறது. ★



# புறம் தரும் பாடம்

—[கு. குட்டுவஞ்சேரல்]—

மலையமான் திருமுடிகாரி ஒரு குறுநில மன்னன். ஏழைகளின் நண்பன். புலவர்களுக்குப் பரிசில் வழங்குவதில் இவனொரு புரவலன். இவனுடைய புற நாடுதான் மலை வளப்பமுடைய சிறிய நாடே தவிர, இவன் அகநாடு மிக விசாலமானது. பண்புடையது. பகுத்தறிவுடையது. எதையும் சிந்தித்துச் செயலாற்றும் திறனுடையது. எவ்வரசர்களுக்குள் போர் முண்டானாலும், அவர்கள் குறுநில மன்னராயினும் சரி, பெருநில மன்னராயினும் சரி, இவன் எந்தப் பக்கம் சேருகிறானோ, அந்தப்பக்கம் தான் வெற்றி நிச்சயம் கிடைக்கும். இதனால் இவனுக்கு மிகுந்த செல்வாக்கு உண்டு. இவன் காரி என்னும் குதிரையை உடையவன். இவன் அழகிய— நன்ருகவாரி விட்ட (தலை) முடியை உடையவன். இஃதே போல் நாட்டின் முடியையும் நல்லபடி ஆட்சி செய்யும் திறமுடையவன். இவனைப்பற்றி புலவர் கபிலர் கூறுகிறார் கேளுங்கள்:-

"பெரிய மலையினின்று இழிந்து நிறைந்திருந்து வழியின்ற பெரிய அருவியை உடைய பழம் பெருமை வாய்ந்ததும், சிறப்பு மிக்கதும், மலை வளப்பம் அத்தனையும் உடைய நாட்டையுடைய புகழ் மிக்க அரசனாகிய திருமுடிகாரியைக் காணச் செல்வோர், நல்ல நாள் அல்லாத தினத்தில் சென்றாலும், பறவைகளின் சகுனத் தடையாயிருந்த நேரத்தில் சென்றாலும், நல்லசந்தர்ப்பம் இல்லாத நேரத்தில் சென்றாலும், திறனற்ற வார்த்தைகளை மொழிந்தாலும் திரும்பி வரும்போது வெறுங்கையோடு வருபவர் இல்லை" எனக் கூறுகிறார்.

இதிலிருந்து இவ்வரசன் சமயத்தையும் சமயச் சழக்கர்களையும் எவ்வளவு மதித்தான் என்பதும், சோதிடத்தையும் பஞ்சாங்கத்தையும் எவ்வளவு சோதித்தான் என்பதும், அக்காலத் தமிழர்களிடம் அறியாமை இருள் அகன்று பகுத்தறிவொளி வீசியது என்பதற்குச் சான்று வேறு என்ன வேண்டும்.

இது, இக்காலத்தில் பகுத்தறிவுக் கொள்கையை ஏற்க மறுக்கிறவர்களுக்கு புறம் தரும் ஒரு பாடமாக இருக்கட்டும்.

"நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர் குநரல்லர் ;
நெறி கொளப் ; பாடான்றிரங்கு
பீடு கெழுமலையிற் பாடியோரே!"

★

பதிவுஎண்.எம்.4642

தொலைபேசி எண்... { இல்லம்....118

# தஞ்சை மாவட்ட தி.மு.க. 3-வது மாநாடு

**1958 மே 10, 11 சனி, ஞாயிறு ஆகிய நாட்களில்**
**திருவாரூரில் பன்னீர்செல்வம் பந்தல்,**
**அழகிரி அரங்கில் நடைபெறும்.**

| தலைவர் | திறப்பாளர் |
|---|---|
| **கே. ஏ. மதியழகன் பி. ஏ.** | **ப. உ. சண்முகம் எம்.எல்.ஏ.** |

## அண்ணாதுரை, நாவலர் நெடுஞ்செழியன்

என். வி. நடராசன்,
ஈ. வெ. கி. சம்பத் எம். பி.,
ஏ. வி. பி. ஆசைத்தம்பி எம். எல். ஏ.,
இரெ. இளம்வழுதி,
தில்லை வில்லாளன் எம்.ஏ.
டி.கே. தாமரைச்செல்வன்
கி. மனோகரன்
கா. அப்பாதுரையார் எம்.ஏ., எல்.டி.,
எம். பி. சுப்பிரமணியம் எம். எல். ஏ.,
அ. பொன்னம்பலனார்,

அன்பில் தருமலிங்கம்,
க. அன்பழகன் எம்.எல்.ஏ.,
சி. பி. சிற்றரசு,
காஞ்சி- கல்யாணசுந்தரம்,
இரா. செழியன், எம்.ஏ.,
இராம. அரங்கண்ணல்,
கண்ணதாசன்,
ஏ.கோவிந்தசாமிஎம்.எல்.ஏ.
வி. பி. இராமன்,
மதுரை. முத்து,
டி. வி. நாராயணசாமி,
புரட்சி நடிகர் எம். ஜி. இராமச்சந்திரன்

இலட்சிய நடிகர் எஸ். எஸ். இராசேந்திரன்
மூதாட்டி இராமாமிர்தம்மையார்,
சத்தியவாணிமுத்து எம். எல். ஏ.,
அலமேலு அப்பாதுரை,
வெற்றிச்செல்வி அன்பழகன்
பொற்செல்வி இளமுருகு
தேசியமணி கண்ணன்
பங்கயற்செல்வி
சற்குணம்

கலந்துகொள்வர்.

**மற்றும் கழக முன்னணி வீரர்கள் கலந்துகொள்வர்.**

| | | |
|---|---|---|
| நடிப்பிசைப் புலவர்<br>**கே. ஆர். இராமசாமி**<br>அவர்களின் இன்னிசையுடன்<br>மாநாடு துவக்கும். | **10—4—58** சனி இரவு **10**-மணிக்கு<br>**மு. கருணாநிதி** நடிக்கும்<br>புதுமை நாடக மன்றத்தாரின்<br>**உதயசூரியன்**<br>நாடகம் நடைபெறும். | இரு நாட்களுக்கும்<br>நுழைவுக் கட்டணம்:—<br>**ரூ. 5, 3, 2,**<br>பெண்களுக்கு ரூ. **1** |

**என். எஸ். இளங்கோ** வ. கு. தலைவர் — **மு. கருணாநிதி** பொருளாளர்
**ப. நாராயணசாமி, சி. கிருஷ்ணமூர்த்தி** செயலாளர்கள்
**கு. அடைக்கலம், அ. நடராசன்,** தொ. ப. தலைவர்கள்
**அ. நாகப்பன்,** விளம்பரப் பொருப்பாளர்.

குறிப்பு:— முதல்நாள் திருவாரூர் புகைவண்டி நிலையத்திலிருந்து காலை 9 மணிக்கு, மாபெரும் ஊர்வலம்—மாநாட்டு ஊர்வலம் புறப்பட்டு, மாநாட்டுப் பந்தலை அடையும். மாநாட்டு நிகழ்ச்சிகளை திரைப் படம் எடுக்க ஏற்பாடுகள் நடைபெறுகிறது.

காஞ்சீபுரம், 93, திருக்கச்சிநம்பி தெரு "திராவிடநாடு" அச்சகத்தில் ஆசிரியர் சி. என். அண்ணாதுரையால் அச்சிடப்பட்டு வெளியிடப்படுகிறது.

